உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

கயிலைமாமுனிவர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்



அட்டையில் :

கயிலாயத் திருக்காட்சி

திருக்கயிலாயச் சிறப்பிதழ் இத்துடன்

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.





# அருள் பழுத்த கனிச்சுவை



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-ஆவது அதிபர்
கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தம் குருநாதரிடம் ஒரு வேண்டுகோள் வைக்க இருக்கிறார். ''இந்த வேண்டுகோள் எனக்காகத்தான். இருந்தாலும் இது எனக்காக அல்ல. உங்களுக்காக. உங்களுக்காக உங்களிடமே கேட்கப் போகிறேன்'' என்று தொடங்குகிறார்.

> ''என் பொருட்டு ஆயினும் என்பொருட்டு அன்று; இது
> நின் பொருட்டு''

என்று ஸ்ரீ சுவாமிகள் எடுக்கும் எடுப்பே தத்துவார்த்த மானது. பிள்ளை ஆரோக்யமாக இல்லை என்றால், உலகம் தாயைத்தான் குறை சொல்லும்; ஆரோக்யமாக வளர்க்க

வில்லை என்று, மாணவனின் தோல்விகளுக்கு ஆசிரியனும் காரணம் என்று உலகம் சொல்வதைத் தவிர்க்க முடியாது. 'எளியேனுக்கு அருள்செய்யுங்கள்' என்று விடுக்கும் வேண்டு கோள் சாதாரணமாகப் பார்த்தால் எனக்காக விடுக்கும் வேண்டுகோள் போல இருக்கும்; ஆனால் இத்தனைப் பிறவிகள் தொடர்ந்தும் இந்த ஆன்மாவைக் கடைத்தேற்ற வில்லையே என்ற பழி தங்களைச் சாருமே என்பதனால்தான் இந்த வேண்டுகோளை விடுக்கிறேன்'.

"ஒரு செய்தியைச் சொல்லுகிறேன். ஏழை ஒருவன் தனக்கென உடைமையாக - உரிமையாக ஒரேஒரு வயலைப் பெற்றிருந்தான். அந்த வயலை அவன் எப்படிக் காப்பானோ அதேபோலத் தேவரீர்! என்னைக் காத்து வந்தீர்கள்"

நிறைய வயல்களைப் பெற்றவன் எந்த நிலத்தையும் நேரில் சென்று பராமரிக்க முடியாது.

'செல்லான் கிழவன் இருப்பின், நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்'

என்ற வள்ளுவனின் வாக்குப்படி பராமரிப்பில் குன்றிய நிலம் பயன் தருவதிலும் குன்றிப் போவது இயற்கை.ஒரே ஒரு வயலைப் பெற்றவன் அதுவொன்றே தன் வாழ்க்கைக்கு முழு ஆதாரம் என்பதால் எப்பொழுதும் அதனிடம் கவனம் செலுத்துகிறான். தன் முழு உழைப் பையும் அதற்கு ஆக்குகிறான். அப்படியும் பலன் கிட்டவில்லை என்றால் அறிவோ அநுபவமோ கலக்காமல் முரட்டு உழைப்பை மட்டுமே செலுத்தினான் என்பதாகும். உமி குற்றிக் கை நொந்ததைப்போல அது உழவனுக்கு அவமான மல்லவா?

பலன் பெற்றே ஆகவேண்டும் என்ற முறையில் அறிவு அனுபவ ரீதிகளிலே விவசாயி தன் ஒற்றை வயலைக்

காப்பதைப் போலக் குருநாதா என்னைக் கண்காணித்து அநுக்கிரகித்தார் என்கிறா.

குருநாதனே கடவுள். "இந்த ஆன்மாவுக்கு இன்று பக்குவம் வருமா; நாளை வருமா" என்று குருநாதன் ஆன்மாவின் பக்குவத்திற்கு ஏங்குகிறான் ஆன்மாவின் ஒவ்வொரு பிறவியிலேயும் அதன் பக்குவ வளர்ச்சியை உற்று நோக்குகிறான். ஒவ்வொரு பிறவிலேயும் நுகர்ச்சிகளைத் துரிதப்படுத்தி, பூரணத்துவநிலைக்குக் கொண்டுவரமுயற்சிக் கிறான். இருவினை நுகர்ச்சியும் முடிந்தாலல்லாமல் பக்குவம் பூரணத்துவம் அடையாதே! இந்த நிலையையே மலபரிபாகம் என்றும் சத்திநிபாதம் என்றும் சாத்திரங்கள் பேசுகின்றன.

ஒவ்வொரு பிறவியிலும் ஆன்மாவின் பக்குவநிலையைக் கண்காணித்துக் கொண்டுவந்த கடவுள் கடைசியாக மனிதப் பிறவியில் அந்த ஆன்மா எடுத்த மனித உருவையே தானும் எடுத்துவந்தான். குருநாதனாக வந்தான்.

இந்த மனிதப் பிறவியில் ஆன்மாவுக்குப் பக்குவம் அடைய வேண்டும்; அதில் பூரணத்துவம் பெற வேண்டும் என்ற தாகம் அதிகமாக இல்லை. அதனால் இந்த ஆன்மா வுக்குப் பக்குவப் பூரணம் வராது என்று குருநாதன் அருள் செய்யாமல் ஒதுங்கிவிடக் கூடாது. அப்படி ஒதுங்கி விட்டால் குருநாதன் தோற்றவனாகி விடுவான். அது அவனுக்குக்குத்தான் அவமானம்!

"....ஒரு பொருள் நிகழ்த்துவன் கேண்மோ
வறிஞன் ஓம்பிய செறு ஒன்று ஏய்ப்பப்
பருவம் நோக்காப், பவம்தொறும் பவம்தொறும்
இருவினைப் போகமும் என்கொண்டு ஆர்த்துபு
மற்றுஎன் உருக்கொடும் உற்றனையால். இனித்
தாகம்இன்று ஆகலின் பாகம்இன்று எனக்கென
அருளாது ஒழியினும் பரிபவம் நினக்கே"

(ஒருபொருள்-ஒருசெய்தி;நிகழ்த்துவன்-சொல்லுவேன்; கேண்மோ; கேண்ம்-கேள்; ஓ-அசை; வறிஞன்-ஏழை; ஓம்பிய-பாதுகாத்த; செறு-வயல்; பவம்-பிறப்பு; பவம் தொறும் பவம்தொறும்-ஒவ்வொருபிறவியிலும்; இருவினைப் போகம்-நல்வினை, தீவினை நுகர்ச்சி; ஆர்த்து-நுகரச்செய்து; கொடும்-கொண்டும்; உருக்கொடும்-உருவத்தைக் கொண்டும்; உற்றனை-பொருந்தினை; தாகம்-வேட்கை; இன்று-இல்லை; பாகம்- பக்குவம்; அருளா தொழினும்-அருள் செய்யாவிட்டாலும்; பரிபவம்-அவமானம்.)

'அருளா தொழியுனும் பரிபவம்' என்றதனல் பக்குவம் இல்லாக்காலத்து அருள் செய்யினும் பரிபவமே. ஆயினும் அதுகருணையின் பாற்படுமாகலின் குற்றமின்று என்று குறிப்பித்தவாறு.

'மனிதப் பிறவியில் தாகம் வந்தது; எனவே பக்குவம் வந்தது - எனநானே கூறிக் கொள்ளும்பொழுது நீ அருளாமல்போனல் அது நினக்கு அவமானமாகிவிடும்என்று பொருள்கொள்ளவும் ஏற்றபடி

"தாகம், இன்று; ஆகலின் பாகம்,இன்றுஎனக்கு,என
அருளாது ஒழியினும் பரிபவம் நினக்கே''

என்ற தொடரமைப்பு இருத்தல் நினைத்து நினைத்து மகிழ்தற்கு உரியதாகும்.

— சிவ சிவ

*அண்ணலே எனை ஆண்டுகொண் டருளிய அமுதே*
*விண்ணிலே மறைந்தருள்புரி வேதநா யகனே*
*கண்ணினல் திருக்கயிலையில் இருந்தநின் கோலம்*
*நண்ணி நானிதொழ நயந்தருள் புரிஎனப் பணிந்தார்*

—சேக்கிழார்

# விலங்கு தறித்த விநாயகர்

'மயூரப்பிரியா'.

சோழவள நாட்டில், தஞ்சை மாவட்டத்தில் சீர்காழிக்குத் தென் கிழக்கில் சுமார் 12 கிலோமீட்டர் தொலைவில் விளங்குவது திருவெண் காடு என்னும் திருத்தலம். பொன்னிவளநாட்டின் வடகரைப் பதி களுள் தன்நிகரற்றுத்திகழ்வது இத்தலம். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூவகைப் பெருமைகளும் படைத்தது. மூர்த்திகள்மூன்று சுவேதாரண்யேஸ்வரர், அகோரமூர்த்தி, நடராஜர். அம்மன்மூன்று: பிரமவித்யாம்பாள், பத்திரகாளி, துர்க்கை. தீர்த்தம்மூன்று: அக்னி தீர்த்தம், சூர்யதீர்த்தம், சந்திரதீர்த்தம். தலவிருட்ஷங்கள் மூன்று:- ஆலவிருட்ஷம், வில்வம், கொன்றை. வடவாலவிருஷம் அஷயவடம் என்னும் அழியாதஆலமரம் மிகப்பிரசித்தமானது. காயாவிலுள்ளதை விஷ்ணுபாதம் என்றும் இத்தலத்திலுள்ளதை ருத்திரபாதம் என்றும் போற்றுகின்றார்கள். ருத்திரபாதமாக இரண்டுபாதங்கள் இவ்வால மரத்தடியில் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஸ்ரீ மெய்கண்டார் அவதரித்ததும், பட்டினத்தார் சிவதீட்சை பெற்றதும், காசிக்கு நிகரான தலங்களுள் ஒன்றானதுமான பெருமை திருவெண்காட்டைச்சேரும். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள விநாய கப்பெருமான் மிகவும் காருண்யமூர்த்தி; வன்மைமிக்கவர்; சர்வசக்தி வாய்ந்தபரம் பொருள் ஸ்ரீசுவேதாரண்யஸ்வரர் திருக்கோயிலுக்கு வெளியே கோயில் கொண்டுள்ளார். விநாயகரை இனியா தொரு இடருமகன்று போக மங்களத்தையே அளிக்கவல்ல பெருமானுவார்; இத்தகைய பெருமைவாய்ந்த விநாயகப்பிரான் 'விலங்குதரித்த விநாயகர்' என்றகாரணப்பெயர்பூண்டு, கலிகல்மஷங்களைக் கடித்து கருணைபொழியும் திருக்கோலத்துடன் அணுகும் அடியார்களுக்கு அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாரே! நாமும் தரிசிக்க வேண்டாமா?

இனிஇந்தக் காரணப்பெயர் வந்தவிதத்தைக் காண்போம்!

சேந்தனார் என்ற சிவநேசச் செல்வர் பட்டினத்தடிகளிடம் கணக் காளராகப்பணியாற்றிக் கொண்டு வந்தார் பட்டினத்தடிகள் துறவு மேற்கொண்ட வேளையில், தம் சொத்துக்களையெல்லாம் விநியோகம் செய்து விட்டு, கஜானாவிலுள்ள நிதியை ஏழைகளுக்குத் தாரளமாக வழங்குமாறு நிதியறையைத் திறந்து விட்டு ஊரார் அதனை எடுத்துச்

செல்லுமாறு தன் கணக்காளரைப் பணித்தார் அக்கட்டளையை நிறைவேற்றும் நிமித்தம் சேந்தனாரும் அப்படியே செய்தார். இச் செய்தியைக் கேட்ட அரசன், இழந்த பொருளுக்குக் கணக்குக் காட்ட வேண்டும்மென்று ஆணையிட்டு, கணக்காளரான சேந்தனாரை விலங் கிட்டுச் சிறையில் அடைத்தான். சேந்தனாருடைய மனைவி மக்கள் மிகவும் துயருற்றுப் பட்டினத்தடிகளிடஞ் சென்று முறையிடலாயினர்! பட்டினத்தடிகள் கேட்டுத் திகைத்தாரா! அரசனிடமா சிபாரிசுக்குப் போனார்? இல்லை! திருவெண்காட்டிறைவனுக்குக் கட்டளையிட்டார்! ஆம், அன்பு பெருக, உளங்கனிய இட்ட ஆத்மார்த்தக்கட்டளைதான்!

"மத்தளை தயிருண் டானும் மலர்மிசை மன்னி னானும்
நித்தமுந் தேடிக் காணா நிமலனே! அமல மூர்த்தி!
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர் சேந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி யென்முன் காட்டு!வெண் காட்டு ளானே!"

என்னும் பாடலைக் கொண்டு பணிந்து வேண்டிநின்றார் பட்டினத்து அடிகள். வித்தகமுழுஞானக் கடவுளான விநாயகப் பெருமானைக் கூப்பிட்டு சேந்தனாரின் கைவிலங்கைத் தறித்துச்சிறைமீட்டுவா! என்று பரமேஸ்வரனான திருவெண் காட்டிறைவன் ஆணையிட, வேழமுகத் தானும் விரைந்தேகி, சிறைச்சாலையைத் தகர்த்து, கதவுகளை அப் படியே பெயர்த்து எடுத்து, சேந்தனாரின் கைவிலங்கைத் தறித்து விடுவித்தருளினார்! அதிதீரனல்லவா!

'ஆதிசிதம்பரம்' எனப்படும் திருவெண்காட்டுக்கும் விநாயகப் பெருமானுக்கும் நெருங்கிய தொடர்பிருந்ததாகச் சொல்லப்படுகிறது. கணபதியைச் வாதாபியிலிருந்து தமிழகத்துக்குக் கொண்டுவந்த சிறுத்தொண்டர், இளமையில் வாழ்ந்ததும், அவர் மனைவியார் திருவெண்காட்டு நங்கை அவதரித்ததும் திருவெண்காடு என்ற திருத் தலமேதான். கணபதி வழிபாடு [காணா பத்ய] சாஸ்திரங்கள் மறையவே, க்ஷேத்ரபாலபுரத்தைச் சேர்ந்த ஸ்ரீ சாம்பசிவ சாஸ்திரி களுக்கு மீண்டும் காணாபத்ய ரகசியங்களை அருளிச் செய்த கருணைக் கடலான அருள்மிகு அகோரமூர்த்தி எழுந்தருளியிருப்பதும் திரு வெண்காடே.

விநாயகர் வழிபாட்டுடன் இவ்வளவு நெருங்கிய தொடர்புடைய இப்புண்ணியத்தலமான திருவெண்காட்டில் தென்மேற்கு திசையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ விலங்குதறித்த விநாயகப் பெருமானின் ஆலயம் புதுப்பிக்கப்பட வேண்டிய அளவுக்குப் பழுதுபட்டிருக் கின்றது. உண்ணும் உணவும், பருகும் நீரும், அயர இருக்கையும் அம்பிகை பாலன் அளித்ததன்றோ! அவனருளாலே இந்த விநாயகர் ஆலயத்தைப் புதுப்பித்துச் சிறந்த முறையில் குடமுழுக்குச் செய்யத் திருப்பணிக்குழு அமைக்கப்பட்டுச் செயலாற்றி வருகிறது.

# அகிலாண்ட ஈசுவரி திருக்கோவிலில் அழிவு வேலை

பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து திருத்தலங்களில் ஒன்று திருவானைக் கோவில்!

திருச்சியிலுள்ள பூலோக நாதர், கைலாச நாதர், நாக நாதர், ஜம்பு நாதர், வெளிகண்ட நாதர் ஆகிய புண்ணியத் திருத்தலங்களில் ஒன்று திருவானைக் கோவில்!

அகில அண்டங்களையும் ஈன்று அகிலாண்ட ஈஸ்வரி என்று பெயர் பெற்று மிகுந்த சக்தியோடு விளங்கும் அம்பிகை வீற்றிருக்குமிடம் இத்திருக்கோவில்!

சிவாகம விதிப்படி அமைந்து சைவ சமய முறைப்படி வழிபாடு நடைபெறுதற்குரிய திருச்சி நகர சைவ சமயப் பெருங் கோவிலாக விளங்குவதும் இதுவே!

இத்திருக்கோவிலில், முக்தியடைந்த சைவ சமய நாயன்மார்களுக்கு மட்டுமே சிலை வைத்து வணங்குவது மரபு: புறச்சமய, ஏகான்மவாதிகளுக்கல்ல. அதற்குரிய இடம் வேறு!

சைவ சமயத்தவரல்லாத சங்கராசாரியார் உருவச் சிலை ஒன்றைச் சைவ சமயப் பெருங்கோவிலாகிய இத்திருக் கோவிலில் அமைக்கச் சிலர் முயன்று கொண்டு இருப்பதாகத் தெரிய வருகிறது. இது உண்மையாகுமானால் பெரிதும் வருந்தத்தக்கதாகும்.

இது திருக்கோவிலின் தூய்மையைக் கெடுத்துவிடும்; தெய்வ வழிபாட்டுக்கு அழிவு தேடி மனித வழிபாட்டுக்கு வழி வகுத்துவிடும்; இன்னும் பலருடைய உருவச் சிலையை வைப்பதற்கும் இடம் கொடுத்து விடும்.

மேலும் இச்செயல், அமைதியாக இருக்கின்ற திருச்சிநகரில் சாதிச் சண்டை - சமயச் சண்டைகளைக் கிளப்பி ''மண்டைக் காடு'' ஆக, 'மீனாட்சி புரம்'' ஆக ஆக்கிவிடுமோ என அஞ்ச வேண்டியிருக்கிறது.

ஆகவே, இத்தவறான செயலைச் செய்து இத்திருக்கோவிலின் தூய்மையைக் கெடுக்காதிருக்குமாறு சங்கராசாரியார் சிலையை இத்திருக் கோவிலில் வைக்க எண்ணியிருக்கும் அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் முயன்று இவர்கள் சிலையை வைக்க முன்வருவதானால் திருக்கோவிலில் அறக்காவலர் குழு இதற்கு அனுமதி அளிக்கக் கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறோம்.

இதையும் மீறிச்சிலை அமைக்கின்ற நிலைவருமானால் இந்து சமய அறநிலையத்துறை இக்கொடுஞ் செயலைத் தடைப்படுத்த வேண்டுமெனவும் வேண்டிக்கொள்கிறோம்.

எல்லாவற்றையும் மீறிச் சைவ சமயத்தவரல்லாத மனிதர் சிலையைச் சைவ சமயப் பெருங்கோவிலில் அமைக்க முன் வருவார்கள் ஆனால் கீழ்க்கண்ட எதிர்ப்புக்குழுவும், திருச்சி - திருவானைக்காவல் பொதுமக்களும் அடங்கிய சைவ சமயப் பெரும்படை இதைத் தடுத்து நிறுத்தும்.

அத்தகைய விரும்பத்தகாத போராட்டம் ஒன்றை இத்திருத் தலத்தில் ஏற்படுத்திவிட வேண்டாம எனச் சிலை அமைக்க முயல்ப வர்களுக்கு இதன் மூலம் எச்சரிக்கை செய்கிறோம்.

இங்ஙனம்,

சங்கராசாரியார் சிலை எதிர்ப்புக் குழு.

தலைவர் : கி ஆ. பெ. விசுவநாதம்,
(துணைத்தலைவர், தமிழ்நாட்டுத் தமிழர் பேரவை, திருச்சி)

துணைத்தலைவர்கள் : க. அப்புலிங்கம் பிள்ளை,
தலைவர், பன்னிரு திருமுறை வாரவழிபாட்டுக் கழகம் திருஆனைக்கா.

ப. மூக்கப் பிள்ளை,
தலைவர், திருச்சி மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டம்;
திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை &
திருநெறிய தமிழிசை மன்றப், திருச்சிராப்பள்ளி.

செயலாளர்கள் : சொ. கிருஷ்ணன்,
செயலர், அருள்நெறித் திருக்கூட்டம், திருச்சிராப்பள்ளி.

சாமி மணிவாசகம்,
செயலர், திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை;

ப. சுப்பிரமணியப் பிள்ளை,
செயலர், சிவ ஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவ நெறிக்கழகம்;

ஆ. சோமசுந்தரம்,
செயலர், நாடு காண் குழு, திருத்தவத்துறை.

துணைச்செயலாளர்கள் : கு. மாத்திருவாளன்,
செயலர், பூவாளூர் சைவ சித்தாந்த சங்கம்.

சோ. முத்துக்கந்தசாமி தேசிகர்,
செயலர், திருநெறிய தமிழிசை மன்றம், திருச்சி.

ஆவி. க. ஆவிச்சி செட்டியார்,
அமைப்பாளர், நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம்.

வை. கி. செல்லமணி,
அருள் நெறித்திருக் கூட்டம், பெல்நகர்;

மா. சொக்கையன்,
சேக்கிழார் மன்றம், அய்யப்பநகர்;

ஜெ. இராமகிருஷ்ணன்,
செயலர், அருள்நெறித் திருக்கூட்டம் கைலாசபுரம்.

கூ. மு. பாலசுப்பிரமணியன்,
அருள்நெறித் திருக்கூட்டம், கூத்தைப்பார்;

மற்றும் உறுப்பினர்கள்.

சீனத் தத்துவ ஞானி 'லவட்ஸு' அறவுரைகள்

# 72. தண்டனையைப் பற்றி (1)

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

மக்களுக்கு வன்முறையிடம் அச்சம் இல்லாதபோது
(பொதுவாக நிகழ்வது போல) அவர்களை மாபெரும்
வன்முறை தாக்குகின்றது
அவர்களுடைய உறைவிடங்களை இகழாதே,
அவர்களுடைய சந்ததிகளை வெறுக்காதே
நீ அவர்களை வெறுக்காத காரணத்தால்
நீயும் அவர்களால் வெறுக்கப்பட மாட்டாய்
ஆகையினுல் மெய்ஞானி தன்னை அறிவான், ஆனுல் தன்னைக் காட்டிக்
கொள்ள மாட்டான்
தன்னை நேசிப்பான், ஆனுல் தன்னை உயர்த்திக் கொள்ள
மாட்டான்
ஆகையினுல் அவன் வன்முறையை நிராகரிக்கின்ருன்; நயமுறையை
ஏற்றுக் கொள்ளுகிருன்

## 73. தண்டனையைப் பற்றி (2)

உன்னைக் கொல்லத் துணிவதற்கு யார் தைரியமாய் இருக்கிருர்கள்
உன்னை வாழவிட துணிவதற்கு யார் தைரியமாய் இருக்கிருர்கள்
இவை இரண்டிலும்
சில அனுகூலங்கள் இருக்கின்றன; சில பிரதிகூலங்கள்
இருக்கின்றன
தெய்வம்கூட சிலபேரை வெறுக்கிறது
யார் கொல்லப்பட வேண்டும் ஏன் கொல்லப்பட வேண்டும்
என்று யார் அறிவார்கள்.
ஆகையால் மெய்ஞானிகூட இந்த விஷயத்தை மிகவும் கடினமான
பிரச்சனையாகக் கருதுகிருன்.
கலவரம் இல்லாமல் கைகலப்பு இல்லாமல் வெற்றி பெறுவதில்
டௌவின் முறைமிகச் சாதுர்ய மானது
புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் சொற்கள் இன்றியே
அவை அவைக்குப் பலனளிப்பதில்,
அழைக்காமல் காட்சி அளிப்பதில், வெளிப்படையானயாதொரு
திட்டமும் இல்லாமல் காரியங்களை டௌ சாதிப்பதில்
டௌவின் நெறி மிகச் சாதுர்யமானது

இறைவனுடைய வலை மிக அகலமானதும் பரந்ததும் ஆனது
பெரிய பெரிய கண்கள் உடையது; ஆயினும் யாதும் அவற்றின்வழி
நழுவித் தப்பிக்க முடியாது

## 74. தண்டனையைப் பற்றி (3)

மக்கள் சாவுக்கு அஞ்சுவதில்லை
ஆகையினால் அவர்களைச் சாகடிப்பேன் என்று அச்சுறுத்துவானேன்?
மக்கள் சாவுக்கு அஞ்சுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம்
மேலும் கட்டுக்கு அடங்காதவர்களை நாம் பிடித்துக் கொல்ல
முடியும் என்று வைத்துக் கொள்வோம்
அப்படிச் செய்ய யாருக்குத் துணிவு வரும்?
பலசமயங்களில் தூக்குப் போடுபவனே கொல்லப்படுகிறான்
தூக்குப் போடுபவனின் பதவியை ஏற்பது
திறமைசாலியான தச்சனுக்கு உதவியாகி வாச்சை
கையாள்வது போலாகும்
எவனொருவன் திறமைசாலியான தச்சனுக்காக வாச்சை
கையாளுகின்றானோ
அவன் தன் கைகளைக்காயப்படுத்திக் கொள்ளாமல் தப்புவதில்லை

## 75. தண்டனையைப் பற்றி (4)

மக்கள் பசியால் வாடுகிறார்கள் என்றால்
அவர்களை ஆட்சி புரிபவர்கள் வரியாக வசூலித்த தானியத்தை
அபரிமிதமாக உண்கிறார்கள் என்பது பொருள்
ஆகையினால் பசியால் வாடும் மக்களின் கலகத்திற்கு
அவர்களை ஆட்சி புரிபவர்கள் மக்களின் விஷயங்களில்
தலையிடுவதே காரணம்
இதனால்தான் அம்மக்கள் அவ்வண்ணமாகக் கட்டுக்கடங்காமல்
இருக்கிறார்கள்
மக்கள் சாவுக்கு அச்சமில்லை, ஏனென்றால் அவர்கள் வாழ்வை
ஈட்ட, மிக்க ஆவல் உள்ளவர்களாய் இல்லை
இதுதான் அவர்கள் சாவுக்கு அஞ்சாததின் காரணம்
அவர்கள் வாழ்க்கையில் தலையிடாமல் இருக்கிறார்களே
அவர்கள்தான் வாழ்க்கையை உயர்த்துவதில் சதுரர்கள்

## 76. கடினமும் நளினமும்

மனிதன் பிறக்கும் போது மிருதுவாகவும் பலவீனமாகவும் இருக்கிறான்
இறக்கும் போது அவன் கடினமாகவும் விரைப்பாகவும் இருக்கிறான்
செடி கொடிகளும் மற்ற பொருள்களும் உயிருடன் இருக்கும் போது
மிருதுவாகவும் துவளும் தன்மைத்தாய் இருக்கின்றன
ஆனால் அவை இறந்து போனபின் அவை உலர்ந்து போய் நொறுங்கும்
தன்மைத்தாய் இருக்கின்றன
ஆகையினால் கடினத்தன்மையும் விரைப்புத்தன்மையும் சாவின்
தோழர்கள்
மிருதுவான தன்மையும் சாதுவான தன்மையும் உயிரின்
தோழர்கள்
ஆகையால் ஒரு படை மண்டைக் கர்வம் பிடித்திருந்தால் அது போரில்
தோற்றுப் போகும்
ஒரு மரம் கடினமாய் இருந்தால், அது வெட்டி வீழ்த்தப்படும்.
பெரியன ஆனவையும் வலியன ஆனவையும் அடித்தளத்தைச்
சேர்ந்தவர்கள்
சாதுவான தன்மை உடையவர்களும், மெலியாரும்
மேல்தளத்தைச் சேர்ந்தவர்கள்.

## 77. வில்லை வளைத்தல்

வில் விண்ணைச்சார்ந்த டௌவின் நெறி
ஒரு வில்லை வளைப்பது போல் இருக்கின்றது அல்லவா
மேல்முனை கீழ்வருகிறது கீழ்முனை மேலே போகிறது
அதிகமாக இருக்கும் நீளம் குறைக்கப்படுகிறது போதாத அகலம்
விரிக்கப்படுகிறது:
எவர்களிடம் அதிகமாக இருக்கிறதோ அவர்களிடமிருந்து எடுத்து
விடுவதும்
எவர்களுக்குப் போதுமானது இல்லையோ அவர்களுக்குக் கொடுப்பதும்
இறைவனின் நெறி.

அப்படியல்ல மனிதனின் நடைமுறை:
எவர்களிடம் இல்லையோ அவர்களிடமிருந்து அவன்
அபகரிக்கின்றான்,
எவர்களுக்கு மிதமிஞ்சி இருக்கின்றதோ எவர்களுக்கு அதைக்
காணிக்கையாகச் செலுத்துகிறான்.
தனக்குப் போதிய அளவும் மேலும் உலகம் முழுவதற்கும்
அளிப்பதற்கு வசதியும் யாருக்கு இருக்க முடியும்?
டௌவின் நெறியைக் கடைப்பிடிப்பவனாலேயேதான்.
ஆகையால் மெய்ஞானி செயல்படுகிறான் ஆனால் உடைமைகளை
உடைத்தாய் இருப்பதில்லை

காரியங்களைச் சாதிக்கிறான், ஆனால் தான் சாதித்ததாகச்
சொல்லிக் கொள்வதில்லை,
ஏனெனில் அவன் மற்றவர்களுக்கு மேலானவனாகக் காணப்பட
விரும்பவில்லை.

## 78. தண்ணீரைவிட மிகவும் பலவீனமானது யாதொன்றுமில்லை

தண்ணீரைவிட மிகவும் பலவீனமானது யாதொன்றுமில்லை,
ஆனால் கடினமான பொருளை வெல்வதில் அதைவிட மிக்க திறம்பட்ட
பொருள் யாதொன்றுமில்லை,
அதற்கு மாற்றுப் பொருள் வேறொன்றுமில்லை.
பலவீனம் வலிமையை வெல்கிறது எனபதையும்,
சாந்த குணம் விரைப்பாய் இருப்பதை வெல்கிறது என்பதையும்
யாரும் அறியவில்லை;
இந்த நெறியை யாராலும் பழக்கத்திற்குக் கொண்டு வரவும் முடியாது
ஆகையால் மெய்ஞானி சொல்கிறான்:
நாட்டவர் பழித்துரையை எவனொருவன் பூணதுவாக
ஏற்கின்றானோ
அவன் நாட்டைக் காப்பவன் ஆவான்
உலகத்தின் பாவங்கள் அனைத்தையும்தான் சுமையாக ஏற்றுக்
கொண்டு தாங்குகிறானோ
அவன் உலகத்தின் மன்னன்.
நேர்மையான சொற்கள் கட்டமான சொற்கள் போலத்
தோன்றுகின்றன.



### இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

தலைவலிக்கு

1] பால் கலக்காத சூடான தேனீரில் எலுமிச்சம் பழச்சாறு கலந்து அருந்தத் தலைவலி நீங்கும்.

நீர்சளிக்கு

2] சூடான காபியில் சக்கரைக்குப் பதில் தேன் கலந்து பருகினால் நீர்சளி நீங்கும். தேனீரிலும் இவ்வாறு செய்யலாம்;

முகப்பருக்கள் நீங்க

3] வெந்நீருடன் எலுமிச்சம்பழச்சாறு தினமும் கலந்து பருகிவர குணமாகும்;

Dr. N. சடையப்பன், S.M.P.



# ஸ்ரீ ஏகாம்பரநாதர் பதிற்றுப்பத்தந்தாதி



வகையொன் றறியா மடமனனே மறையோர் பிரியு மகத்தெழுந்த
புகையொன் றெழிலார் தருபுவன சார புரியிற் புகுந்தினிது
நகையொன் றதனாற் புரமபொடித்த நம்பன் திருவே கம்பனருந்
தகையொன் றுறுதாட் சரணுறில்நீ தவிர்வா யவலந் தரணியிலே.

தருண மிதுவே மடமனனே தணவா மலமுந் தவிர்த்தாளும்
அருண கிரியி னவிரெளியை ஆதி பீட மெனும்புரியின்
வருண மறைமா நிழல்மருவு மணியை அணியை வளங்கிளரு
கருணை யமுதை கற்பகத்தைக் கதியை மதியாற் கலப்பதற்கே. 79

கலங்கொள் முலையார் நலமுயங்கக் களிறுண் கனிபோல் கவினழிந்து
மலங்கொள் மனமே மும்மூர்த்தி வாச புரத்தின் மாவடியிற்
பொலங்கொள் மணியைத் தொழுதழுது புரண்டு புரண்டு பரவசமாய்
வலங்கொள் வணங்கு வழுத்திடுமென் மலர்தூய் மலர்த்தாள்
மருவிடவே.

[வேறு]

மருமலர் கொண்டுன் மலரடி பேணும் வகைகாணேன்
கருமல நோயைக் கடிவது மன்றே கவினுருந்
திருமலர் வாவிக் கச்சியே கம்பா சிவனேஎன்[று]
அருமலர் வானோர் தூவிட நல்கும் அருளோனே. 81

அருள்தரு முன்றன் அடியிணை போற்றும் அடியாற்பாற்
தெருள்தரு மொன்றே தேவர்கள் தேவே தெளிஞானம்
பொருள்தரு கச்சித் திருவே கம்பா புலைநாயேன்
மருள்தரு நெஞ்சின் மயலை ஒழிப்பான் வருவாயே. 82

வரைதரு மென்றுய் மனவலி தேர்ந்தொண் மலர்மேவுந்
திரைதரு கச்சித் திருவே கம்பன் சிவனெம்மான்
விரைதரு மென்பூ விஃதென அன்பிற் சிலைவீசுங்
கரையில வன்பர்க் குறுதுணை யாவது கண்டோமே. 83

கண்டது மாயங் கற்பனை யாவுங் கரைவாகும்
உண்டது தானும் ஒருபொரு ளன்றே உருவன்றே
தண்டலில் கச்சித் தனியொரு மாவிற் றழைசோதி
அண்டரும் அறியார் தொண்டரும் அறிவா ரதுதானே; 84

அதுவது வென்றும் அவளவ ளென்றும் அவனென்றும்
இதுவிது வென்றும் இவளவ ளென்றும் இவனென்றும்
உதுவுது வென்றும் உறைகுவ ளென்றும் உதுவென்றும்
புதுமலர் வாவி மாவடி யானைப் புகல்வாரே. 85

புகலுள தோவுனை யன்றி உயிர்க்குப் புவிமீதே
பகலுள தோவுன் பொற்பினை யன்றிப் பணிவாருக்(கு)
இகலுள தோவெளி யேன்பணி கொள்ளவு மென்னாளும்
தகலுள தோவில யோகச் சிப்பதி சார்வாரே. 86

சார்ந்திடு மும்மல வல்வினை நோய்கள் சாராமே
ஈர்ந்திடும் வாளாம் பூதியும் மணியும் எழுத்தஞ்சும்
ஆர்ந்திடு நாவின னுபினன் நெஞ்சே அலையாதே
கூர்ந்திடு சிந்தைக் கச்சியின் மாவடி குறுகாயே; 87

குறுகா ரேதின் பாலெம தூதர்கொ டுந்தீப்போல்
முறுகா ரேயக் கவலையில் நெஞ்சே மூழ்காதே
மறுகா ரேயவ் வன்பர்க ளானர் மகிழ்காஞ்சிப்
பெறுகா ரேதிகழ் மாவடி யாரே பெரிதாமே; 88

பெரிதா னர்கள் யோகமெய்ஞ் ஞானமும் பெறுவார்கள்
அரிதா னர்கள் நின்னருள் வெள்ளத் தாழ்ந்தேவான்
விரிதா ரகையின் மேதினி வாழ்வினில் வீழ்வாரே
பெரிதாள் சூத நிழலுறை வாயுரை பொய்யானே: 89

பொய்யா னர்க்குப் பொய்யே யானன் பொய்யில்லா
மெய்யா னர்க்கு மெய்யே யானுன் விடையாளி
மையார் கண்டன் வானமர் கச்சி மறையோது
நெய்யார் சூலப் படையா னெங்கு நிறைந்தானே; 90

[வேறு]

நிறையுந் தளர்ந்து நிறைவுங் கலங்கி நிலையாத தேகம் விழுநாள்
முறைகொண் டெழுந்த விடைமீதி லேறி முனம்நீ மகிழ்ந்து வருவாய்

துறைகொண் டிருந்த பொருகம்பை மீது தொழுதார்வ மோடு
முனமாள்
நறைகொண் டலர்ந்த மலர்சூடு கச்சி நகராள வந்த சிவனே. 91

சிவராச தானி நாமம் புனைந்து திகழ் காஞ்சி மாவிலுறையுந்
தவராச ராச வேகாம்ப ரேசர் தமரால யங்கள் பலவும்
நவராச ராச கரிகால நாம நரபால னென்னு முரவோன்
அவதார மான பலசாதி பேதம் அமர்வீதி செய்த நகரே: 92

செய்தார்கள் செய்த வினையீடு காய மெனவே தெரிந்த பெரியோர்
வைதார்கள் வைதபொழுதும் புகழ்ந்து மகிழ்வார் மகிழ்ந்த பொழுதும்
எய்தாது நம்மை யெனவெண்ணி நிற்பர் வினைதா னிரண்டு மெனவே
மெய்தா னெனக்கு மருள்காஞ்சி மேவி விடைமீது நின்ற விதுவே. 93

நின்றாள் பணிந்து நின்பேர் புகழ்ந்து நின்பூசை செய்து மறுதே
வின்றாள் தொழாதுன் அடியார் குழாத்துள் இனிதாவிருக்கஅருள்வாய்
கன்றால் விளாவை எறிமாய ஞாதி கமலப் பிரானு மறியா[து]
அன்றாலின் நீழல் அறம்நால்வர் தேற அருள்கம்ப ஞான வடிவே. 94

வடிவொன்று மில்லை மனமொன்று மில்லை வருமாறு மில்லை முடிவா
முடிவொன்று மில்லை முதலொன்று மில்லை முனிவோர்கள் காண்ப
தெவனோ
படிவொன்று மில்லை யடியே னினைந்த பரிசென்று கூட அருள்வாய்
கடியொன்று சூத நிழல்மேவு கம்ப கமழ்கொன்றை வேணியரனே .95

அரனெவ் வுயிர்க்கு முயிராகி னிற்கு அமுதே களிக்கு முரவோர்
உரைசேரும் வேத ஒருமா நிழற்குள் ஒளியான சோதி முதல்வ
கரையார்செய் கம்பை நதிமே லுவந்த கடலான கச்சி நகர்வாழ்
புரகாரி யேயுன் அடியார்க ளோடு புகுதப் பணித்தருள் வையே.

பணியாத காயம் மாகாய நின்சொல் பாடாத வாய்கள் கால்வாய்
அணியாத கைகளு லக்கைகள் நின்முன் ஆடாத கால் மரக்கால்
கணியாத நெஞ்ச முடையோர்க்கு மென்ன கதியுண்டு கச்சி நகர்வாழ்
பிணியாவு நீக்க மமுதேபென் னாவி பிறவாது காத்தல் கடனே. 97

கடல்நஞ் சயின்று மறைபாட நின்ற கவின்மேவு கச்சி நகரை
இடங்கொண் டிருந்த வுமையாள் மணாள யெனையாண்ட தற்பி
னடியேன்

மடங்கொண் டிருந்த அறிவுங் கழன்று மலமுந்து மிந்து மயல்தீர்
படரொன்றி னின்ற முடியண்ணல் பாத பகுப்பன்றி யேது மிலையே.

ஏதுக்க ளாலு மறிவான லாம லிமையோர்கள் தாமு மறியார்
சாதுக்கள் செய்த சமாதிக் குனின்ற தகையான் அணுக்கள்
தொகையான்
வாதுக்கள் பேசி மதமீறி யுன்னை மதியார்கள் என்ன மதியோ
மாதுகக நீங்கும் உயர்கச்சி யூரில் வளர்கம்ப வான நிதியே. 99

நிதியார் குபேர னுறவா யிருந்தும் நிலமீதில் ஊர்கள் முழுவதும்
விதியார் சிரத்திற் பலிதேர வந்த விதமென்ன சொல்ல வறியேன்
மதியார் செய்ம்வணி பெறுகம்ப வாண மகிழ்சேரு முன்றன் மதியின்
துதியாரு மென்சொற் பிழையே பொறுத்தே அருள்செய்ய வேண்டு
மிறையே.

ஏகாம்பரேஸ்வர அந்தாதி முற்றும்.



*******************************

# சித்தாந்த சாத்திரங்கள்

*******************************

மு. அருணுசலம்

## திருவுந்தியார்

முதன் முதல் திருவுந்தியார் என்ற சமயப்பாடலாகத் தோன்றியது மாணிக்கவாசகர் பாடிய திருவாசகத்தில் 14வது பதிகமாக உள்ள திருவுந்தியார். இதுதில்லையில் அருளியது என்றும், ஞான வெற்றி என்றும் குறிப்புக்களை உடையது. இதன் 19-பாடல்களில், முதல் 4 பாடல்களில் திரிபுர சங்காரம்; அடுத்த12பாடல்களில் தக்கயாக சங்காரம்; 17-ல்உபமன்னியுவுக்குப் பாற்கடல் ஈந்தசெய்தி; 19-ல்இராவணனை ஒறுத்த செய்தி; ஆகிய வெற்றிச்செயல்களும், அருட்செயல்களும் கூறப்பட்டுள்ளமையால் இது ஞானவெற்றி என்பது பொருத்தமே. இவ்வகைப் பாடல் பொதுவாக 3-கலித்தாழிசை அடிகளைக் கொண்டது என்பது முன்னே விளக்கப்பட்டது.

இப்பாடல்கள் உந்தீபற என்ற முடிபைக்கொண்டன. 2வது 3வது அடிகள் உந்தீபற என்றமகுடத்தோடு முடிகின்றன. உந்தி பறத்தல் என்பது குழாம் கூடிய மகளிர் உந்தி விளையாட்டாடுதல் என்று சொல்லப் படுகிறது.

இருப்பினும் முதன் முதலாகப் பெரியாழ்வார் உந்திபறத்தல் என்ற பொருளை அமைத்து ஒருபதிகம் பாடியிருக்கிறார். (பெரியாழ்வார் திருமொழி 3-9)இதுவும் குழாம்கூடியமகளிர் விளையாட்டாயினும் வேறு அமைப்புடையது. இதுநான்கடியின் மிக்கு ஐந்தடி கொண்ட கலித்தாழிசையாகஅமைந்துள்ளது.இதன்மகுடம்'பாடிப்பற' என்பது, இப்பதிகத்தின் பொருள் அமைப்பையும் இது உந்தி பறத்தலே என்பதையும் ஆழ்வார் இத்திருமொழியின் 16-ம்பாசுரத்தால் தெளிவாக்குகிறார்.

நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று
உந்தி பறந்த ஒளியிழை யார்கள்சொல்
செந்தமிழ்த் தென்புதுவை விட்டு சித்தன்சொல்
ஐந்திேனாடு ஐந்தும் வல்லார்க் கல்லலில்லையே,

இத் திருமொழியின் பொருள் நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்றசொல் என்பதும் இது உந்திபறத்தலாகிய விளையாட்டில் ஒளி யிழையார்கள் சொல் என்பதும் தெளிவாகின்றன. இங்கு வேறுபாடு இத்திருமொழி முழுமையும் ஐந்தடிக் கலித்தாழிசையால் அமைந் திருப்பதும், 'பாடிப்பற' என்ற மகுடம் பெற்றிருப்பதும், காலத்தால் இலக்கிய வரலாற்றில் இதுவே முதன்முதலாகத் தோன்றிய உந்திப் பாட்டு என்பது பொருந்தும்.

இதன்பின் எழுந்தது மாணிக்கவாசகருடைய திருவுந்தியார். முன்னது பொதுவாகக் கண்ணனுடைய பல்வகைச் சிறப்புக்களையும் [இராமனுடைய புகழையும்] பாடுவதாகும். ஆனால் பின்னது சிவபிரா னுடைய பராக்கிரமத்தைச் சொல்வதாகும்.

சிலப்பதிகார உரையில் அரங்கேற்றுக்காதையில், அடியார்க்கு நல்லார் எண்ணற்றவரிக்கூத்துப் பாடலாகிய விளையாட்டுப்பாடல்களை அடுக்கிச் சொல்கிறார். அவற்றுள் உந்தியும் ஒன்று. இங்கு அவர் சாழ லையும் உந்தியையும் சேர்த்துச்சொல்வது காணத்தக்கது. பறக்கின்ற உந்தியை, அதாவது தும்பியைப் பின்பற்றித் தாமும் உந்திக்கைகளை நீட்டி விரித்துப் பறப்பது போன்ற விளையாட்டாகும். திருவுந்தியார் இரண்டாம் பாட்டில் ''பழக்கந்தவிரப் பழகுவதன்றி உழப்புவதென் பெண்ணே'' என்ற தொடர் வருவதால் இதுமகளிர் விளையாட் டென்பது தெளிவு.

அவ்வாறன்றி இதனுள் சாத்திரக் கருத்துக்களை அமைக்க எண்ணியஆன்றோர் உம்திபற என்று இத்தொடரைப் பிரித்தல் செய்து 'உம்முடைய அறுதி குற்றமாகிய மலங்கள் விட்டுப் போம்படி' என் பதே இந்நூலின் கருத்து என்பர். அல்லது அவைவிட்டுப் போம்படிக் கருதி நிற்பீர் என்றும் பொருள் கொள்ளலாம். இச் சாத்திர நூலின் முடிவான பொருள் மலநீக்கமும், ஞான அனுபவமும் ஆதலால் இதனுடைய முடிந்த கருத்தும் ஞானவெற்றி என்பதில் ஐயமில்லை.

திருவுந்தியாரானது முழுமையும் அநுபூதி நூலாக உள்ளது ஆசிரியர் இந்தநூலின் பாடல்களில் எந்த இடத்திலும் தமது சிவா னுபவத்தைத் தவிர வேறு எந்தச்செய்தியையும் சொல்லவில்லை. சிவ ஞானபோதம் போன்ற பின்வந்த சாத்திரங்கள் போல இவர் எந்தப் பொருளையும் முறையாகச் சாத்திரம் போல அமைக்கவில்லை.

திருவுந்தியாரின் பொருளமைப்பைச் சிலசொற்களால் சொல்ல லாம். முதல் 6பாடல்களில் உய்யவந்த தேவர் தம்முடைய ஆசிரியரால்

பெற்ற திருவருள் ஞானத்தைத் தொகுத்துக் கூறுகிறார். 7 முதல் 18வரையுள்ள பாடல்கள் சைவசாதனத்தின் வகைகளாக ஆதார யோகம், நிரந்தரயோகம், மீதானத்தை அடைந்து அதில் நிற்றல் என்ற பொருள் கூறப்படுகிறது. 19 - 20 பாடல்கள் இன்புறுநிலை: 21-22 பாடல்கள் இன்புறுநிலை விளைதற்குத் தத்துவ உணர்வும் வாசியோகமும் உபாயங்களென்று உணர்த்துகின்றன. 23 முதல் 28 வரை உள்ள பாடல்கள் பாசவீடும், சிவப்பேறும் ஆகிய பயன்களைக் கூறும். 29-31 பாடல்கள் பரமுத்தியின் இயல்பு; 41-43 சிவநெறியின் ஞான ஆதரநிலையும், உய்யும்உபயமும்; 44-ஆசான் வாழ்த்து; 45-நூற்பயன்; இவ்வாறு இந்தத் திருவுந்தியாரின் பொருள் நிலையை உணர்வதற்குத் திறவுகோல் இதன் வழி வந்த திருக்களிற்றுப்படியாரே ஆகும்.

ஆலாலசுந்தரம்பிள்ளையவர்கள் திருவுந்தியாரில் சொல்லப் பட்ட பொருள் அருட்சக்தி, அருட்சக்தியின் சாமர்த்தியம், ஞான வெற்றி என்ற மூன்று நிலைகளை என்று விவரித்து எழுதியுள்ளார்.

உரைகள் :-

திருவுந்தியாருக்குச் சிறப்பான உரைகள் பண்டை உரைகள் இரண்டும், புதிய உரைகள் மூன்றும் உள்ளன.

### 1. திருவுந்தியார் பழைய பொழிப்புரை :-

இது காலந் தெரியவில்லை. மிகவும் சுருக்கமாகவும் மூலத்தை அடியொற்றியும் ஓர் அனுபூதிமானால் தெளிவாக எழுதப்பட்டுள்ள பழைய பொழிப்புரை. இவர் எந்த இடத்திலுமே அதிகமாகச் சிவாநுபவத்தை விளக்க முயலவில்லை. மூலநூல் பழைய தமிழ் முறையில் எளிய செவ்விய நடையில் அமைந்திருப்பதற்கேற்பப் பொழிப்புரை ஆசிரியர் எளிமையாக, இலக்கியச் சுவை பொருந்தத் தம் பொழிப்-புரையைச் செய்திருக்கிறார். இந்த உரையானது பின்வந்த சிவப் பிரகாசத் தம்பிரான் உரைக்கு ஆதாரமாயுள்ளது. இது திரு. அனவரதவிநாயகம் பிள்ளை எழுதி வைத்திருந்த காகிதப் பிரதியையும், எம்மிடம் இருந்த ஏட்டுப் பிரதியையும் ஒப்புநோக்கி முதன்முதலாக 1940-ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த மகா சமாஜம் வெளியிட்ட சித்தாந்த சாத்திர உரை-2-ம் பதிப்பில் பக்கம் 656-669-ல் எம்மால் வெளியிடப்பட்டது. இவ்வாசிரியர் தம் உரை முகப்பில் திருவுந்தியார் நூல் வரலாற்றை விரிவாக உரைக்கிறார். பல தொடர்புகளை நன்கு உணர்வதற்கு அவருடைய கருத்தையுணர்வது அவசியம். அதை இங்கே விரிவாக அப்படியே தருகிறோம்:

பழைய பொழிப்புரையின் அவதாரிகை :-

பரிபூரணமாயிருக்கிற சிவன் ஆன்மாக்களுக்குச் சிவானுபவம் விளையும் நிமித்தமாக மானுடச் சட்டை சாத்தி, உய்ய வந்த தேவ நாயனார் என்னும் திருநாமத்தையும் சாத்திக்கொண்டு, வடவேங்கடந் தென்குமரி எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒருநாள் திருவியலூரிலே எழுந்தருளினர் அவ்வூரிலேயிருக்கிற ஆளுடைய தேவநாயனார் கண்டு தெரிசித்தபோது. அவருடைய மலபரிபாகத்தை யறிந்து தீட்சை பண்ணி ஞான உபதேசமும் பண்ணி, திருவுந்தியார் என்று பேரிட்டு நாற்பத்து நாலு செய்யுளாக நூலும் பண்ணி அந்த நூல் முடிவிலே தம்முடைய பெயர் தோன்ற ஒரு செய்யுளும் பண்ணி அந்த நூலினுடைய தாற்பரியத்தையும் உள்ளபடி அறிவித்து, சிறிது நாள் சென்று தன்னியல்பையடைந்தார். பின்பு ஆளுடைய தேவ நாயனார் முன்சொன்ன எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒருநாள் திருக்கடவூரிலே எழுந்தருளினர். அவ்வூரிலே ஆட்டு வாணிபக் குலத்திலே உற்பவித்தவரொருவர் கண்டு தெரிசித்தபோது, அவருடைய மலபரிபாகத்தையறிந்து தீட்சை பண்ணித் தம்முடைய ஆசாரியாருடைய பெயரையுஞ் சாத்தி திருவுந்தியாரென்கிற சாத்திரத்தையுமறிவித்துச் சிறிது நாள் சென்று தன்னியல்பையடைந்தார். பின்பு அந்த உய்யவந்த தேவநாயனார் முன்சொன்ன எல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்திலே ஒருநாள் சிதம்பரத்திலே எழுந்தருளினர். அவ்வூரிலே ஒருவர் ஞானப்பெற வேண்டித் தலவாசம் பண்ணியிருந்து இவரைக் கண்டு தெரிசித்தபோது, (இவர் அவரது) மலபரிபாகத்தையறிந்து தீட்சை பண்ணித் திருவுந்தியாருக்கு வழி நூலாகத் திருக்களிறறுப்படியார் என்று நூறு செய்யுளாக ஒரு நூலும், பண்ணியறிவித்துச் சிறித நாள் சென்று தன்னியல்பையடைந்தார். திருக்களிற்றுப்படியார் என்பதற்குக் காரணம் இவர் நூல் பண்ணின காலத்து இவர்கீழ்ச்சாதியென்றும் இவருடைய நூல் கைக் கொள்ளலாகாதென்றுஞ்சிறிதுபேர் சொல்ல, சிறிது பக்குவராயுள்ளவர்கள் அந்த நூலைப் பஞ்சாக்கரப் படியிலே கொண்டுபோய் வைத்தார்கள். அந்தப் படியிலே செய்திருக்கிற கல்லானை [அந் நூலைத்] துதிக்கையாலேயெடுத்து எல்லாவற்றுக்கும் மேற்படியிலே கொண்டுபோய் வைத்தது. ஆகையால் [இந்நூல்] அப்பெயர் பெற்றது. இந்தச் சந்தான பரம்பரையை இப்படிக் கண்டுகொள்க.

## 2. தில்லைச் சிற்றம்பலவர் உரை

இவ்வுரை 1677-ல் செய்யப்பட்டது என்பது வரலாறு. தில்லைச் சிற்றம்பலவருக்குச் சிவப்பிரகாசர் என்ற பெயரும் உண்டு. உமாபதி

சிவாசாரியார் சிவப்பிரகாசம் என்ற சைவ சித்தாந்த சாத்திரம் செய்தபின்பு அநேகர்சிவப்பிரகாசம்என்றபெயரையேதரித்துக்கொண்டார்கள். இவரும் அவர்களுள் ஒருவர். இவர் நெடுங்காலம் தில்லையில் தங்கிநடராசப் பெருமானுடைய நடனக் கோலத்தில் மனத்தை ஈடுபடுத்திவாழ்ந்தமையால் இவர் தில்லைச்சிற்றம்பலவர் என்றேவழங்கப் பெற்றார். உரையேடுகளில் தில்லைச்சிற்றம்பலவர் என்ற சிவப்பிரகாசர் என்றே பெயர் காணப்படுகிறது. தென்னார்க்காட்டில் பாலாற்றங்கரையிலுள்ள முப்பந்தொட்டி என்ற தலத்தில் கோயில் கொண்டுள்ள சோமநாதர் என்ற சிவபிரான் மீது இளமையில் ஓர் உலாப் பாடியிருக்கிறார்.

தில்லையினின் மேவுந் சிவப்பிரகா சன்னிசைத்துச்
சொல்லுந் தமிழ்மாலை சூடினேன்

என்பது உலாவின் 148-ம் கண்ணி. இதனால் ஆசிரியர் பெயர் தெரிகின்றது. இவர் ஒருகால் திருவாவடுதுறையில் பிறந்திருக்கலாம்; இளமையில் முப்பந்தொட்டியில் தங்கி அங்கு உலாப்பாடி முதுமையில் தில்லையையடைந்து நடன தரிசன விசேஷத்தால் உந்தி, களிறு என்னும் இரண்டுக்கும் உரையெழுதினர் என்று கருத வேண்டியிருக்கிறது. இவர் உரைக்கு ஒரு சிறப்புப் பாயிரச் செய்யுள் சிதம்பரம் மௌனசாமி மடத்து ஏட்டில் காணப்படுகிறது;

உய்ய நெறிகாட்டும் உய்யவந்தா னோதியநூல்
செய்யபிர காசத் திருவுந்திக்கு – ஐயமறப்
போற்றும் படியே உரைபுகன்றான் பூதலத்தோர்
சாற்று சிவப்பிரகா சன்.

இவர் முழுமையும் பொழிப்புரையை நன்கு பயின்று தம்முடைய விரிவுரையை எழுதியிருக்கின்றார். இவருடைய உரை மிக்க சிறப்புப் பொருந்தியது. இவ்வுரை சென்ற நூற்றாண்டில் கொன்னூர் சண்முக சுந்தர முதலியார் தொடங்கி இன்று வரை பலரால் பலமுறை பதிப்பிக்கப்பட்ட போதிலும் மீண்டும் ஏட்டுப்பிரதிகளை ஒப்பு நோக்கித் திருத்தமாகப் பதிப்பிக்கத் தக்கது. ஏடுகளில் நிரம்பப் பாடபேதம் காணப்படுகிறது. முதல் உந்திப்பாட்டின் உரையில் 'உந்திபற' என்ற தொடருக்குப் பொழிப்புரை கூறும் விளக்கத்தை இவர் அப்படியே தம்நூலில் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார்; இவருடைய உரையின் சிறப்பு, ஒவ்வொரு உந்திப் பாடலுக்கும் அவதாரிகை சொல்லுமிடத்து முந்திய பாடலோடு தொடர்புபடுத்திச் சொல்லுகிறார்.

இவர் தமது உரைக்குக் கூறும் அவதாரிகை முன்னமே சொல்லிய பொழிப்புரையில் காணும் அவதாரிகைக்குச் சிறிது வேறாய் உள்ளது. இதனால் விளையும் பயன் கருதி இதனையும் முழுமையாக இங்கே தருகிறோம்.

## தில்லைச் சிற்றம்பலவர் அவதாரிகை.

திருவுந்தியார் என்கிற சாத்திரத்துக்கு வரலாறு; சைவ சித்தாந்தத்தின் உண்மையை உணர்த்த வல்ல, உய்யவந்த தேவர் என்று திருநாமத்தையுடைய பரமகலியாணன் உத்தர பூமியினின்றும் தெட்சிணபூமியில் உள்ள ஆத்மாக்களை இரட்சிக்கப்படுகை காரணமாகச் சேது அளவாக எழுந்தருளி, மீண்டும் ஸ்ரீ காவேரிக்கரையே எழுந்தருளாநிற்கத், திருவிசலூரில் ஆளுடைய தேவநாயனார் தெரிசிக்கப் பெற்று அந்தத் தெரிசன விசேடத்தினாலே இவருக்குக் கன்மத்தில் உபேட்சையும் ஞானத்தில் அபேட்சையும் உண்டாய் ஸ்ரீ பாதத்தில் தண்டன் பண்ணித், ''தம்பிரானே, அடியேனும் அனாதியே தொடங்கி ஜனன மரணங்களாகிய துக்க சாகரத்திலே வீழ்ந்து கரைகாணாமல் அழுந்தாநின்றேன். அடியேனை இந்த ஜனன மரணமாகிய துக்க சாகரத்தினின்றும்எடுத்தருளித்,திருவடியாகிய கரையிலே சேர்த்தருள வேணும்'' என்று விண்ணப்பம் செய்யக் கேட்டுத் திருவுள்ளத்தடைத்தருளிக், காருண்யத்தின் மிகுதியாலே ஸ்ரீ காவேரிக் கரையேயிருந்து திருக்கண் சாத்தித் திருவடியும் வைத்தருளி, இவருக்கு ஞான விரோதமாயுள்ள மலமாயா கன்மங்களையும் கருவிகரணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் உணர்த்தி, இவை தோஷமே விளைக்கும் என்கிற மரியாதையும் அறிவித்து, இவையிற்றினின்றும் விடுவித்து ஆத்மசொருபத்தையும் சிவசொருபத்தையும் உணர்த்திச் சிவனே குருமூர்த்தி ஆனான் என்னும் படியும் தெளிவித்து அநாதியே கூடிப் போந்த வாதனை தீரும்படி சிவசொருபத்துடனே பல பிரகாரத்தாலும் ஐக்கியத்தையும் பண்ணுவித்து வேறற நிற்கும் உபாயமும் கொடுத்து இந்த நிலை பிரிந்தால் பார்த்துக் கூடும்படி சிருட்டியாக ஒரு சாத்திரம் வேணுமெனக் கருதி, ஆலம் வித்திலே ஆலினது பரிணாமம் அடங்கிய தன்மை போல வேதாகமங்களில் தீர்வையான பொருளை நாற்பத்து நாலு திருவுந்தியில் சுருங்க அருளிச் செய்து இது நீங்கலாகத் தம்முடைய திருநாமம் தோன்ற ஒரு திருவுந்தியும் ஆக நாற்பத்தைந்து திருவுந்தியும் அருளிச் செய்து, இந்தச் சாத்திரத்தையும் இவற்குட்படுத்தி, ''மேலும் ஞானத்துக்குப் பக்குவரானாரைக் கடாச்சிக்க வேண்டின காலத்து இந்தச்சாத்திரத்தின் வழியே புத்தியும் படுத்து இரட்சியும்'' என்று அருளிச் செய்து, மீண்டும் உத்தர பூமியே எழுந்தருளினார்

பின்பு ஆளுடையதேவ நாயனாரும் நெடுங்காலம் திருவிசலூரிலே எழுந்தருளியிருந்து விசுவத்தின் உள்ளார் கிலேசம் தீரும்படி வியாக்தி பண்ணுநிற்கிற காலத்து, திருக்கடவூரிலே ஆட்டு வாணிப வங்கிசத்திலே கன்மசேஷத்தாலே அவதரித்தாரொருவர். அவர் கன்ம ஞானத்திற்குப் பக்குவமானார். அப்போது தம்மைக் கடாட்சிக்க வேண்டி ஆளுடைய தேவ நாயனாரைத் தரிசித்த அளவிலே தம்முடைய நிலையைக் கைவிட்டு இவருடைய ஸ்ரீ பாதத்திலே தண்டன் பண்ணி, அடியேனை இரட்சித்தருளவேணும் என்று விண்ணப்பம் செய்யக்கேட்டருளி, இவர் ஞானத்திற்குப் பக்குவரானார் என்னும் படியும் விளங்கி இவர் கருத்தைத் திருவுள்ளத் தடைத்தருளி இவரையும் தாம் பெற்றபடியே இரட்சித்து, இந்தத் திருவுந்தி என்கின்ற சாத்திரத்தையும் உளப்படுத்தி, தம்முடைய தேசிகன் திருநாமப் படியே 'உய்ய வந்த தேவநாயனார்' என்று திருநாமமும் சாத்தி, இவரும் திருவிசலூரிலே மீள எழுந்தருளினார்.

பின்பு உய்யவந்த தேவ நாயனாரும் நெடுங்காலம் இப்பொருளுடனே வாதனை பண்ணி அனுபவ சித்தியான பின்பு பெரும்பற்றப் புலியூரிலே எழுந்தருளியிருக்கிற நாளிலே ஞானத்துப் பக்குவமானவர் ஒருவர் வந்து நெடுங்காலம் ஸ்ரீபாதசேவை செய்து, இந்தச்சேவையும் திருவுள்ளத் தடைத்தருளி, இவருக்குத் தாம் பெற்றபடியே உணர்த்தி இவர் பொருட்டாக திருக்களிற்றுப்படி என்ற சாத்திரத்தைத் திருவுந்தியுள்ளுறையாக அருளிச் செய்து இந்தச் சாத்திரம் இவருக்குட்படுத்தித் தம்மைப் போலப் பார்த்தருளினார்.

பின்பு இந்தச் சாத்திரங்களுக்குப் பாஷ்யமாகிய யுக்தியும் இட்ட ஞாதாக்களுக்குத் திருக்களிற்றுப்படிக்குத் திருவுந்தி உள்ளுறை ஆகையால் திருவுநதிக்கு விருத்தியிடாமல் திருக்களிற்றுப்படிக்கு விருத்தியிட்டருளினார்கள். பின்பு இந்தத் திருவுந்தியின் பொருளை விரித்து எழுத என்று விசாரித்தளவில் இதனுடைய விரிவை எழுத அரிதாகையாலே இதற்குத் திருத்துருத்தியில் ஆளுடைய தேவர் மெய்கண்ட தேவநாயனார் திருவடியடியாரில் திருவாவடுதுறை தில்லைச் சிற்றம்பலவர் சிவப்பிரகாசரும் இட்ட விருத்தியைக் கடாட்சிக்கப் பெற்ற கலியாணர்கள் கேட்டருளினர். குற்றம் உள்ளது தீர்ந்து கொள்ளா நிற்பர்கள். கடாட்சிக்க இல்லாதவர்கள் இதன் குண தோஷம் காணக் கண்ணில்லா தொழுகையால், அவர்களால் ஒன்றும் அளவுபடுத்தி உரைக்கப்படாது: ஆதலால் இந்தத் திருவுந்தியை விருத்தியுடன் கேட்கப் பார்த்தவர்களுக்கும், கேட்டவர்களுக்கும் ஜெனன மரணங்கள் விட்டுச் சாயுச்சியத்தில் ஐக்கியத்தை அடைகை சந்தேகமில்லை.

இந்தச் சாத்திரமான நாற்பத்தைந்து செய்யுள்களிலும் முடிவிலே உந்தீபற என்ற ஒரு சொல்லாக முடிந்த இதற்குக் காரணம் நீ என்றது குற்றத்தை ஆகையால் உனக்கு அறுதியே குற்றத்தைச் செய்து போதுகின்ற ஆணவம் மாயை காமியம் என்கின்ற மும்மலங்களும் கருவி கரணாதிகளும் தேகாதிப் பிரபஞ்சங்களும் விட்டுப் போகும்படி ஞானசாத்திரத்தினது கருத்தே கருத்தாக நில் என்பதெனக் கொள்க.

முற்பட்ட செய்யுள் தம்முடைய சிடன் கேட்பது பயனாகத் தமக்குக் கடாசித்த பரமாசாரியன் உண்மையை அருளிச் செய்தது. இவ்வளவு நூலின் வரலாறு விரித்துரை எழுதி மேற்செய்யுள் உண்மையை அருளிச் செய்கின்றார்.

இனி இக்காலத்துத் தோன்றிய புதிய உரைகளைச் சிறிது குறிப்பிடுவோம்.

(வளரும்)

❋❋❋



# தியாகர் என்பது தகும்



கி. வா. ஜகந்நாதன்

தியாகராசப்பெருமானுக்கு அந்தத் திருநாமம் பலவகையாலும் தகும் என்பதைக்காரணங்களுடன் சொல்லவருகிறார் குமரகுருபரர். தியாகம் என்பது கொடையைக்குறிக்கும். கொடையில் வல்ல கர்ணனுக்குக் கூட அந்தப் பெயர் இயல்பாக இல்லை. இவரோ தியாகராசராக இருக்கிறார். தியாகம்பண்ணுபவர்களில் அவர் பேரர

முதலில், நன்றாக உழுதுண்ணும் ஆற்றல் படைத்த ஒருவனுக்கு இந்த வையம் முழுவதையுமே கொடுத்திருக்கிறார். அவர் தாம் திருமால். அவர் வராக அவதாரம் எடுத்து இந்த உலகத்தைத்தம் கொம்பால் உழுதாராம்; பிறகு உண்டாராம்; 'உழுதுண்ணவல்லான்' என்று அவரைச்சொல்கிறார். இரணியாட்சன் என்பவன் உலகத்தைப் பாயாகச்சுருட்டிச் சென்றபோது திருமால் அவனைக் கொன்று தம் கொம்பிலே நில மகளை ஏந்தினர். அந்த நில மகளையே தம் மனைவியாக ஏற்றுக் கொண்டார். அதன் பின்பு நில முழுவதையும் தம் வயிற்றில் வைத்துக கொண்டார்.

வையம் முழுதும் உழுது உண்ண
வல்லாற்கு அளித்து.

வராகாவதாரத்தில் உழுது கிருஷ்ணவதாரததில் திருவயிற்றில் அடக்குதலின் இங்ஙனம் கூறினார். உழவுத் தொழில் செய்து அதனுல் பெறும் விளைவுகொண்டு உண்பான் என்பது வேறொரு பொருள். அத்தகையோனுக்கே நிலம்பயன்படுமாதலின் வையம் முழுவதும் அளித்ததாகக் கூறினார். திருமாலுக்கு வையத்தை அளித்தலாவது அவர் மண்மகளை மனைவியாகப் பெறச் செய்ததது என்று இதனை விளக்குவார்கள் மகா மகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள். இது ஒரு தியாகம்.

அடுத்தது, குபேரனுக்கு வழங்கிய கொடை. நவ நிதிகளையும் குபேரன் கையில் கொடுத்தார்.

நவநிதியும்
கையில் ஒருவருக்கு அளித்து.

'நிதி எடுத்து அளிக்கப்படும் பொருளாதலின் ''கையில் அளித்து'' என்றார்' என்று கூறுவார்கள் ஐயரவர்கள்.

மூன்றாவது தியாகம் அவர் அன்பர்களுக்குத் தருவது. தம்மை

நாடி வழிபடும் அடியார்களுக்கு அவர் சிறந்த கதியாகிய மோட்சத்தையே தந்தருளுவார்.

எமக்கே கதிவீடு அளித்து.

'எமக்கே' என்று தம்மைப் போன்ற மெய்யடியார்களையும் உளப்படுத்திச்சொல்கிறார். இன்னாருக்கு இன்னது தரவேண்டும் என்றதகுதியை அறிந்தவர் தியாகேசர். ஆதலால் வேறு ஒன்றையும் வேண்டாத அன்பர்களுக்கு வேறு எல்லாவற்றையும்விடச் சிறந்ததாகிய வீட்டின்பத்தை வழங்குவார்.

மூன்றாவது தியாகம், தம் உடம்பின் ஒருபாதியையே நல்கியது எல்லா உலகத்தையும் ஈன்றும் இன்னும் கன்னியாகவே இருக்கும் உமாதேவிக்குத் தம் திருமேனியில் ஒரு கூற்றையே அளித்தவர் அவர். அவர் மலம் அற்றவர்.

ஓர் கன்னிகைக்கு
மெய்யில் ஒரு கூறு அளித்தனரால்.

சக்தி எல்லாவற்றையும் ஈன்றவளாயினும அவள் என்றும் கன்னியாக இருப்பவள். ''அழியாத கன்னிகை'' என்று அபிராமி பட்டர் பாடுவார்.

''சிவம்சத்தி தன்னை ஈன்றும்
சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்திரு வருப்பு ணர்ந்திங்
குலகுயிர் எல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரி ஆகும்;
பால்மொழி கன்னி ஆகும்;
தவம்தரு ஞானத் தோர்க்கித்
தன்மைதான் தெரியும்
அன்றே''

என்பது சிவஞானசித்தியார்

திருமாலுக்கு வையத்தையும், குபேரனுக்கு நவநிதியையும், அடியார்களுக்கு வீட்டையும், அம்பிகைக்குத் திருமேனியில் ஒரு கூற்றையும் அளித்த விமலர் கமலாலயமாகிய திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகப் பெருமான்.

அவ்வாறு வழங்கியதனால் தியாகர் என்ற திருநாமம் தலைவராகிய இவருக்கே பொருத்தமாக இருக்கிறது.

கமலைத் தியாகர் என்பது
ஐயர் இவர்க்கே தகும்.

பெரியவர்களைப் பாராட்டி முகமனாக உயர்வு நவிற்சி தோன்றப் புகழ்வதுண்டு. அந்த வகையில் அமைந்தது அன்று இது;

முகமன் அன்று.

சிலரைப் புகழும்போது அவர்களின் இயல்புக்கு மேலாகவே புகழ்வது புலவர் இயல்பு. இயல்பாக ஒன்றைச்சொல்வது புகழ்தல் ஆகாது அதைப் பட்டாங்குரைத்தல் என்பர். உள்ளதை உள்ளபடியே சொல்வது அது. கதிரவன் கிரணங்களை வீசுகிறான், சந்திரன் நிலவை விரிக்கிறான், மனிதன் காலால் நடக்கிறான என்று சொன்னால் அவை இயல்பைச் சொன்னதேயன்றிப் புகழ் ஆகா.

புகழில் ஓரளவு மிகையும் இருக்கும். மேலே சொன்ன தியாகச் செயல்கள் அனைத்தும் தியாகேசர் இயல்பாகவே புரிந்தருள்பவை. ஆதலின் அவற்றைச் சொல்வது புகழ்தல் ஆகாது.

புகழும் அன்று ஆமே.

இவ்வாறு இயல்பாகத் தாம் செய்யும் செயல்கள் தியாகமாக இருக்கும் வண்ணம் அமைந்தவர் தியாகேசர். அந்த இயல்பைச் சொல்லுதல் அவரைப் புகழ்தல் ஆகாது. மலர் மணம் வீசுவது போலவும் நீர் தண்மை தருவது போலவும் அந்தச் செயல்கள் அவருக்கு இயல்பாகவே அமைந்தவை.

வையம் முழுதும் உழுதுஉண்ண
 வல்லாற்கு அளித்து நவநிதியும்
கையில் ஒருவருக்கு அளித்துஎமக்கே
 கதிவீடு அளித்து, ஒர் கன்னிகைக்கு
மெய்யில் ஒருகூறு அளித்தனரால்
 விமலர்; கமலைத் தியாகர்என்பது
ஐயர் இவர்க்கே தகும்; முகமன்
 அன்று; புகழும் அன்றாமே.

நிலம் முழுவதையும் உழுது அதன் விளைவு கொண்டு உண்ணும் ஆற்றல் பெற்றவனாகிய திருமாலுக்கு அளித்து, நவநிதிகளையும் கையிலே குபேரனாகிய ஒருவனுக்கு அளித்து, அடியார்களாகிய எங்களுக்குச் சிறந்த கதியாகிய வீட்டை வழங்கி, ஒப்பற்ற கன்னிகையாகிய உமாதேவிக்குத் தம் திருமேனியில் ஒரு கூறாகிய வாம பாகத்தை அளித்தார். மலமற்றவராகிய இவர்; அதனால் கமலாலயமாகிய திருவாரூரில் உள்ள தியாகப் பெருமான் என்ற திருநாமத்தால் வழங்கும் வழக்கு வேறுயார்க்கும் பொருந்தாமல் இவருக்கே பொருந்தும்; இது உபசார வழக்கு அன்று; புகழும் அன்றாம்.

[உழுதுபின்பு உண்ணவல்லான்: திருமால். நவநிதிகளாவன: பதுமம், மகாபதுமம், சங்கம், மகரம், கச்சபம்,முகுந்தம், நந்தம், நீலம், கர்வம் என்பன. ஒருவற்கு - குபேரனுக்கு. எமக்கே: ஏகாரம் பிரிநிலை; கதிவீடு- மேலான கதியாகிய வீடு. கதி - அடையும் இடம். ஓர் - ஒப்பற்ற. கன்னிகை - அம்பிகை. கன்னிகைக்கே: ஏகாரம் பிரிநிலை. ஒரு கூறு: இடப்பாகம். அளித்தனரால்: ஆல், அசை. விமலர் - மலமற்றவர்; ''ஆணவம் அகன்ற சுத்த அறிவில்லா உருவமில்லாத் தாணு''என்பது சாத்திரம். ஐயர்- மேலானவர்; தலைவர். இவருக்கே: ஏகாரம், பிரிநிலை, முகமன் - உபசார வழக்கு. புகழ்–உயர்த்திப் பேசுதல். அன்றாமே; ஏகாரம், ஈற்றசை.]

இறைவன் பலவகையில் பலருக்கு அருள புரிபவன் எனபது கருதது

திருவாரூர் நான்மணிமாலையில் உள்ள 24–ஆவது பாட்டு இது.

# இசை மேதை பாடலில் இசை ஞானி மைந்தர் (தீட்சிதர் க்ருதியில் சுந்தரர்)

❋ பருத்தியூர், டலவர் K. சந்தானராமன், M. A. ❋

இணையற்ற இசைமூர்த்திகள் மூவருள்ளும், சிவத்தலங்கள் பலவற்றைத் தரிசித்து, ஆங்காங்குள்ள இறைவன் மீதும் இறைவியின் மீதும் இனியஇசைப்பாடல்களை இயற்றிய பெருமை ஸ்ரீமுத்துசுவாமி தீட்சிதர் அவர்களுக்கே உண்டு.

கீழ் வேளூர் கேடிலியப்பரைக் காணும் ஆவலுடன்அவர் அவ்வூர் சென்ற பொழுது அர்த்த ஜாமம் முடிந்து ஆலயத் திருக்கதவம் அடைக்கப்பட்டிருந்தது. இறைவனை நினைந்துருகி அவனுக்குகந்த 'சங்கராபரண' இராகத்தில் ''அட்சயலிங்க விபோ'' என்ற பாடலைப் பாடியவுடன் மூடியிருந்த கதவம் முத்துசுவாமி தீட்சிதருக்காக அட்சயலிங்கர் அருளால் திறந்து கொண்டது; திருக்காட்சியும் கிடைத்தது.

இவ்வாறு இறைவனின் அருள் பெற்ற வரலாறு படைத்த தீட்சிதர் அவர்கள் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பற்றியும் ஓர் இசைப்பாடல் இயற்றியுள்ளார் என்பது சிலரே அறிந்த செய்தியாகும்.

ஏழாம் திருமுறை வழங்கிய சுந்தரரைப் பற்றி ஏழுகுறிப்புகள் தரும் அப்பாடல் வருமாறு:-

சுந்தரமூர்த்திம் ஆச்ரயாமி
சிவபூசுர குலாப்தி சந்ரம், கருணா சாந்ரம்
கந்ர்ப விடம்பன விக்ரஹ சாந்திம்
சாமக் ரோதாதி ரஹிதோப சாந்திம்
மந்தஸ்மித ம்ருது காதனம், மாணிக்ய ருசிரஸதனம்
குந்தமுகுள நிபரதனம், குருகுஹ மோதித கதனம்

'டாக்கா ராகம்' என்னும் அபூர்வ ராகத்தில் அமைந்த இந்த க்ருதியில் மாதொரு பாகனுர்க்கு வழிவழி அடிமை செய்யும்

வேதியர் குலத்துதித்த சுந்தரர் சந்திரன் அனையவர் என்பதை ''சிவபூசுர குலாப்தி சந்ரப்'' என்ற சொற்றொடர் குறிப்பிடு கிறது.

சுந்தரர் மாணிக்கம் அனைய மேனியும், மதனை இகழ்ந்த வடி வழகும் உடையவர் என்பதனை முறையே மாணிக்ய ருசிரஸதனம் கந்தர்பவிடம்பன விக்ரஹ சாந்தியம் என்ற சொற்றொடர் களும் குறிக்கின்றன.

கண்களுக்கு அடியில், மூக்கின் கீழ் உள்ள பகுதி, ஆண்களுக்கு த் தாமரை மொட்டினைப் போல் இருக்க வேண்டும் மென்பது 'சாமுத்ரிகா' இலக்கணமாகும். சுந்தரர் இந்த அழகினைப் பெற்ற வர் என்பதனை ''குந்த முகுள நிபரதனம்'' என்ற சொற்றொடர் கூறுகிறது.

மற்ற மூன்று குறிப்புகளும் சுந்தரரின்பண்பு நலன்களைவிளக்கு கின்றன.

''மந்தஸ்மித ம்ருது கதனம்'' ''புன்முறுவலுடன் இனிமை யாகப் பேசுபவர்'' என்றும், ''கருணாசாந்ரம்'' 'கருணையுடன் கூடியவர்' என்றும் புகழ்கிறார்.

சுந்தரரைப் பற்றி அரைகுறை யாக அறிந்த சிலர் ''இருவரை மணந்து இன்பம் நுகர்ந்தவர்'' என மிகவும் தவறாக எண்ணு கின்றனர்.

பதினெட்டே ஆண்டுகள்வாழ்ந் தவர்; அதற்குள் பல்லாயிரக் காதம் நடந்தவர்; இறைவன் விதித்த இருவரைத் தவிர எவரை யும் ஏறெடுத்தும் பாராதவர் - கோட்புலியார் அளித்த குலக் கொடிகள் இருவரையும் ''என் மக்கள்'' எனப்போற்றிய பெரும் தகை சுந்தரர் என்பனவற்றை யெல்லாம் அவர்கள் அறியட்டும் எனக்கருதியோ என்னவோ ஸ்ரீ தீட்சிதர் அவர்கள் சுந்தரரை ''காமக்ரோதாதி ரஹிதோப சாந்திம்''-''காமம் வெகுளிகளை விட்டொழிந்தமைந் தோர்'' என்ற சொற்றொடர் கொண்டு புகழுகிறார்.

அபூர்வ ராகத்தில் அமைந்த அபூர்வ க்ருதியான இதனைச் சிவாலய விழாக்களிலும் அடியார் திருநட்சத்திர விழாக்களிலும் இசைப்பது ஏற்றம் தரும்என்பதில் ஐயமில்லை.



ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன்
நொடித் தான்மலையைக்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவலய
வூரன்சொன்ன
ஏழிசை யின்தமிழால் இசைந்தேத்திய
பத்தினையும்
ஆழி கடலரைய அஞ்சா யப்பர்க்
கறிவிப்பதே.



# சைவ வேளாளர் சங்கம்

## சிதம்பரம் கிளை

18-7-82 ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 4-மணி அளவில் சிதம்பரம் கிளையின் பொதுக்குழு கூட்டம் நடைபெற்றது. டாக்டர் M. S; கோவிந்தசாமி அவர்கள் தலைமை வகித்தார்கள். செயலர் அனைவரையும் வரவேற்றார். பொருளர் அவர்களால் 15-8-82 வரை உள்ள வரவு செலவு நிதிஅறிக்கைப் படிக்கப்பட்டு ஒப்புதல் பெறப்பட்டது.

தலைவர் அவர்கள் சங்கம் அமைக்கப்பட்டதிலிருந்து (28-2-82) 4 மாதங்களில் செய்த பணிகளை எடுத்துக் கூறினார்கள்; எதிர்காலத் திட்டங்கள் பற்றி விரிவாகக் கூறி, அதற்கான செலவினங்களுக்கு வேண்டிய நிதியை நன்கொடை மூலம் பெறவேண்டியிருப்பதையும் சொல்லி, எதிர்காலத் திட்டங்கள் முடிவு செய்யப்பட்டுள்ளன.

### ஆற்றிய பணிகள்

1. 28-2-82-ல் சிதம்பரம் சைவ வேளாளர் சங்கம் ஆரம்பிக்கப் பட்டது.
2. இன்று 202 உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ளனர். 15 ஆயுள் உறுப் பினர்கள்.
3. நிதிஅறிக்கை அளித்தது:
4. இரண்டு பொதுக்குழு கூட்டங்களும் - இரண்டு செயற்குழு கூட்டங்களும் நடைபெற்றுள்ளன.
5. குறுகிய காலத்தில் முடிவு செய்யப்பட்டு குடந்தையில் நடை பெற்ற தஞ்சை மாவட்ட மாநாட்டின் வெற்றிக்குப் பாடு பட்டது. நன்கொடை மூலம் ரூ 400-ம்; விளம்பரம் மூலம் ரூ 1200-ம்; வசூல்செய்து அளிக்கப் பட்டுள்ளது.
6. சைவ வேளாளர் குடும்பங்களிடையே திருமணத் தொடர்பு கொள்ள ''திருமணத் தொடர்புத் திட்டம்'' தொடக்கப்பட்டு ஜாதகக் குறிப்புகள் அனுப்பபட்டு வருகின்றன.
7. இந்தக் கல்வி ஆண்டில் (1982-83) சைவவேளாள மாணவ மாணவி களுக்கு ரூ 600க்கு புத்தகங்கள், நோட்டுகள், எழுதுகோல்கள் முதலியவைகள் இலவசமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இத்

திட்டத்திற்குப் பலர் பொருளாகவும், சிலர் புத்தகங்களாகவும் கொடுத்து உதவியுள்ளனர்.

### ஆற்ற வேண்டிய பணிகள் (எதிர்காலத் திட்டங்கள்)

1. மேற்கொண்டு 300 உறுப்பினர்களைச் சேர்த்தல்.
2. படித்துப் பட்டம் பெற்று வேலைதேடும் இளைஞர்களின் விவரங்களைச் சேகரித்து முடிந்த உதவி செய்தல்.
3. பெண்களுக்கு (10 பேர்கள்) தையல் பயிற்சி அளித்து வருமானம் பெறுவதற்கு வழிசெய்து கொடுத்தல். இத்திட்டத்திற்கு ஒவ்வொரு நபருக்கும் ஆகும் தொகையைக் கீழ்க்குறிப்பிட்டவர்கள் தனித் தனியே பொறுப்பேற்றுள்ளார்கள்.

    1. திரு. M. S. கோவிந்தசாமி, தலைவர்.
    2. திரு T. R. தியாகராசன், செயலர்.
    3. திரு. R. சுப்பிரமணியபிள்ளை, பொருளர்.
    4. திரு. திருநாவுக்கரசுபிள்ளை, து. தலைவர்.
    5. திரு. சண்முகவேலர், உறுப்பினர்.
    6. திரு. முத்துக்குமாரசாமி, ,,
    7. திரு. செல்வக்கணபதி, ,,

பொதுக்குழு கூட்டத்தில் ரூ 90 நன்கொடையாக ரூ 5 வீதம் பல உறுப்பினர்கள் கொடுத்தார்கள்.

4. எல்லா நிலைகளிலும் படிக்கும் மாணவ மாணவியர் பற்றிய விவரங்களைச் சேகரித்து அடுத்த ஆண்டிற்குச் சிறப்பாக செயல்படுதல்.
5. மாவட்டத்தில் பிற இடங்களில் கிளைகளை ஆரம்பிக்க ஏற்பாடு செய்தல்.
6. மாநாட்டுத் தீர்மானப்படி "தயாமூலதனம்" நிதியை சிவராத்திரி அன்று ஒவ்வொரு வீட்டிலும் எடுத்துவைக்கச் செய்து-வசூலித்து வங்கியில் கட்டுதல்.
7. ஆண்டுதோறும் "திருநாவுக்கரசர்" திருநாளைக் கொண்டாடுதல்.
8. ஆண்டுவிழாவன்று திருமுறைவிழாக் கொண்டாடுதல்.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துந்துபி ஸ்ரீ புரட்டாசியீ (1982 செப்டம்பர் — அக்டோபர்)

திதி, நட்சத்திர காலம் முடியும் நேரம் (ரயிலவே மணிக்கணக்கில்)

| தமிழ்வ | | அங்கில:வ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1 | | (17—9—82) | வெள்ளி | மேகாளய அமாவாசை 17-39 | பூரம் 10-48 |
| 2 | | (18—9—82) | சனி | பிரதமை 16-05 | உத்திரம் 9-30 |
| 3 | | (19—9—82) | ஞாயிறு | துதியை 15-04 | அஸ்தம் 9-22 |
| 4 | | (20—9—82) | திங்கள் | திரிதியை 14-44 | சித்திரை 9-33 |
| 5 | செப்டம்பர் | (21—9—82) | செவ்வாய் | சதுர்த்தி 15-07 | சுவாதி 10-26 |
| 6 | | (22—9—82) | புதன் | பஞ்சமி 16-15 | விசாகம் 12-02 |
| 7 | | (23—9—82) | வியாழன் | சஷ்டி 18-03 | அனுஷம் 14-18 |
| 8 | | (24—9—82) | வெள்ளி | சப்தமி 20-21 | கேட்டை 17-04 |
| 9 | | (25—9—82) | சனி | அஷ்டமி -22-55 | மூலம்- 20-08 |
| 10 | | (26—9—82) | ஞாயிறு | நவமி 25-30 | பூராடம் 23-14<br>சரஸ்வதிபூசை, ஆயுதபூசை |
| 11 | | (27—9—82) | திங்கள் | தசமி 27-49 | உத்திராடம் 26-06<br>விஜயதசமி |
| 12 | | (28—9—82) | செவ்வாய் | ஏகாதசி 29-39 | திருஓணம் 28-31 |
| 13 | | (29—9—82) | புதன் | துவாதசி நாள்முழுவதும் | அவிட்டம் நாள்முழுவதும் |
| 14 | | (30—9—82) | வியாழன் | '' 6-53 | அவிட்டம் 6-20 |
| 15 | | (1—10—82) | வெள்ளி | திரயோதசி 7-26 | சதயம் 7-31<br>நடராஜர் அபிஷேகம் |
| 16 | | (2—10—82) | சனி | சதுர்த்தசி 7-20 | பூரட்டாதி 8-03<br>மகாத்மாகாந்தி அடிகள் பிறந்த நாள் |
| 17 | | (3—10—82) | ஞாயிறு | O பௌர்ணமி 6-38 பின் பிரதமை 29-28 | உத்திரட் 8-01 |
| 18 | | (4—10—82) | திங்கள் | துதியை 27-55 | ரேவதி 7-31 |
| 19 | | (5—10—82) | செவ்வாய் | திரிதியை 26-07 | அசுவனி 6-39 |
| 20 | அக்டோபர் | (6—10—82) | புதன் | சதுர்த்தி 24-09 | கார்த்திகை 28-18 |
| 21 | | (7—10—82) | வியாழன் | பஞ்சமி 22-06 | ரோகிணி 26-58 |
| 22 | | (8—10—82) | வெள்ளி | சஷ்டி 20-01 | மிருகசீரிஷம் 25-38 |
| 23 | | (9—10—82) | சனி | சப்தமி 17-58 | திருஆதிரை 24-18 |
| 24 | | (10—10—82) | ஞாயிறு | அஷ்டமி 15-56 | புனர்பூசம் 23-01 |
| 25 | | (11—10—82) | திங்கள் | நவமி 13-57 | பூசம் 21-48 |
| 26 | | (12—10—82) | செவ்வாய் | தசமி 12-03 | ஆயில்யம் 20-39 |
| 27 | | (13—10—82) | புதன் | ஏகாதசி 10-16 | மகம் 19-38 |
| 28 | | (14—10—82) | வியாழன் | துவாதசி 8-39 | பூரம் 18-49 |
| 29 | | (15—10—82) | வெள்ளி | திரயோதசி 7-15 | உத்திரம் 18-15<br>நரகசதுர்த்தசி |
| 30 | | (16—10—82) | சனி | சதுர்த்தசி 6-12 பின் அமாவாசை 29-34 | அஸ்தம 18-04<br>தீபாவளி |
| 31 | | (17—10—82) | ஞாயிறு | பிரதமை 29-28 | சித்திரை 18-21 |

சூரியன்துலாத்திற்கு 13-17

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

குடு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

## முக்குணங்கள், புத்தி ஆகியவற்றின் தொழில்

42. அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா விருதி
அடர்ச்சிமிகும் கௌரவம் அநியமம்இவை அடைவே
நிலவியிடும் மும்மூன்றும் உயிர்ஒன்றிற் கலந்தே
நிற்கும்இவை நிறைபுலனின் பயன்எவையும் கவரும்
குலவிவரும் போகம்கொள் இடமாம் மாறுக்
குறைவில்ஒளி யாம்அல்கில் புலனிடத்தில் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரன்அருளால் புந்தி
பஞ்சாசத் பாவகமும் பண்ணுவிக்குந் தானே.

(தெ—ரை) குணங்கள் எண்ணிறந்தன. அறிவும், மெத்தென்று இருத்தலும், ஒன்றுவிட்டு ஒன்றுபற்றும் அசைவும், கொடிய செயற்பாடுகளும், மிகுதியாகத் தன்னைத் தான் மேப்படுத்திக் கொள்ளுதலும், செய்யத்தகாதனவற்றில் ஈடுபடுதலும் ஆகிய இவ்வறுகுணங்களும் முறையே சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களிலும் இவ்விரண்டாக அடங்கிடும். தாம்தாம் அடங்கியிருக்கும் குணங்களைக் கூட்ட இவைஒன்பதாம். இவை உயிர்தொறும் கலந்து நிற்கும். அமைந்த பொறிவழி வரும் புலன்களை இவை நுகரும். கொண்டாடப்பட்டு வரும் நுகர்வுகள் பலவற்றையும் பற்றச் செய்யும். எஞ்ஞான்றும் நீங்காத நிறைஒளியாயும் இருக்கும். புத்தியானது நுகர்தற்குரியனவற்றை உறுதிப் படுத்தும். அப் புத்தி புலன்களொடு பல்வகையாக ஒற்றுமைப்பட்டு ஐம்பது வகைக் குணங்களையும் இறையருளால் இயற்றும்.

இக்குணங்களுள் ஒன்றுமேற்படின் ஏனையவை அவற்றுள் அடங்கி நிற்கும். சாத்துவிகம் ஏனைய இரு குணங்களை அடக்கித் தான் மேலிட்டிருக்கும்பொழுது இரு குணங்கள் தோன்றும். ஒன்று அறிவு, மற்றொன்று மனம் மொழி மெய்கள் பொருள் நுகர்ச்சியில் மெத்தென்று இருப்பது. இராசதம் ஏனைய இருகுணங்களையும் அடக்கித்

தான் மேலிட்டிருக்கும் பொழுது இருகுணங்கள் தோன்றும். ஒன்று அசைவு. மற்றொன்று கொடுமையான உரை சிந்தனை செயல்களாம். தாமதகுணம் ஏனைய இரு குணங்களையும அடக்கித் தான் மேலிட்டிருக்கும்பொழுது இரு குணங்கள் தோன்றும். ஒன்று தன்னைத்தான் மதித்தல் மற்றொன்று தகாத செயல்களில் ஈடுபடுவது. மேற்கூறியவாறன்றி முக்குணங்கள்வழி வேறு பல குணங்களும் தோன்றும். சாத்துவிகக் குணத்தின் வகைகள் பதினாறு: 1. வீரம். 2. மனந்தளராமை. 3. ஆற்றல். 4. மென்மை. 5 சிறுமை. 6 மகிழ்ச்சி. 7. நேர்மை. 8. தூய்தாக இருப்பது. 9. புண்ணியம் மேற்கொளல். 10. ஆற்றல். 11. பொறுமை. 12. கேட்டவற்றை மறவாதிருத்தல். 13. சிந்தையின் நிறைவு. 14. விடுபெற வேண்டும் என்பதில் வேட்கை. 15. அகக் கருவிகளை அடக்குதல் 16. மிகு கருணை. இராசத குணத்தின் வகைகள் ஒன்பது: 1. யான் எனது என்னும் செருக்கு. 2. மிகுவலிமை. 3. கொடுமை. 4. பெருமுயற்சி 5. வஞ்சனை. 6. உறுதியுடைமை. 7. இரக்கமின்மை. 8. நுகர்ச்சியில் பெருவிருப்பு. 9. கூடாவொழுக்கம். தாமதகுணத்தின் வகைகள் ஒன்பது: 1. கல்வி முதலியவற்றில் விருப்பமின்மை. 2 சோம்பல். 3. இவறன்மை. 4. புறங்கூறல். 5. தன்னை வியத்தல். 6. பெரும் தூக்கம். 7. நன்மை செய்தற்கு ஒருப்படாமை. 8. கேடுசெய்தல். 9. அறிவின்மை. மூன்று குணங்கள் ஒன்பதாகவும் முப்பத்துநான்காகவும் இன்னும் பலவகையாகவும் பெருகுதலின் 'அலகில்குணம்' என்றார். முக்குணங்களும் நுண்ணுடம்பின் வாயிலாக உயிரிடத்துப் பொருந்தி நிற்கும். நிறைபுலனில் பயன் எவையும் கவரும் - நிறைந்த பொறிகளின்வழி பற்றப்படும் பொருள்கள் எல்லாவற்றிலும் ஆசையை உண்டாக்கும். இது தாமத குணத்தின் தொழிலாம். நிறைபுலன் - அறிகருவி ஐந்தும் தொழிற்கருவி ஐந்துமாம். பயன் - இவற்றின்வழிப் பற்றப்படும் பொருள்: சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. கவரும்-அவாவினை உண்டாக்கும். குலவிவரும் போகங்கள் இடமாம்-பாராட்டிப் பேசப்படும் நுகர்வுகளைப் பற்றச் செய்யும். இது இராசத குணத்தின் தொழிலாம். உயிர் தாம் நுகரும் பொருள் ஒவ்வொன்றிலும் இயைந்தும் இன்புற்றும் நுகர்வனவாய் விளங்கலின் 'குலவிவரு போகம்' என்றார். மாறு குறைவுஇல் ஒளியாம் – உயிர் தான் செய்த வினைக்கு ஏற்ப அவ்வப் பொருள்களையும் நுகர்தற்குரிய அறிவினைச் செய்யும் இது சாத்துவிகக் குணத்தின் தொழிலாம். உயிர் நுகர்வன ஒவ்வொன்றும் அதன் வினைக்கு மாறு ஆகாதனவாம். ஆதலின் 'மாறு' என்றார். குறைவுஇல்ஒளி-உயிரது அறிவு. அழிவற்றதாதலின் 'குறைவுஇல்' என்னும் அடையால் உயிர் குறிக்கப்பட்டது. புந்தி-

புத்தி. பொறிவழி வரும் பொருள்களைப் பகுத்துணர்தலும் உறுதிப் படுத்துதலும் இதன் தொழிலாம் முக்குணங்களும் மூன்றாய்த்தோன்றிச் சமமாய் அலைவற நிற்கும்நிலை சித்தமாகும். இராசதமும் தாமதமும் அடங்கிச் சாத்துவிகம் மேம்பட்ட நிலை புத்தியாகும். இப்புத்தி தன்மம் முதலிய எண்வகைக் குணம் உடையதாம். அக் குணங்களின் வாயி லாக நுகரும் நிலையை அடையும். அவை தன்மம், ஞானம், வைராக் கியம், ஐசுவரியம், அதன்மம். அஞ்ஞானம், அவைராக்கியம், அநை சுவரியம் என்பன. இவற்றுள் பின்னைய நான்கும் முன்னைய நான் கின் மறுதலையாம். முன்னைய நான்கும் சாத்துவிகத்தின் குணங்க ளாம். அடுத்த ஒன்றும் இராசதத்தின் குணமாம். பின்னைய மூன்றும் தாமதத்தின் குணங்களாம். உயிர் பொருள்களை நுகர்தற்குரிய அறிவை வருவிக்கும். அவ்வறிவு அறிவு, மகிழ்வு, வலியின்மை, விபரீதம் என நால்வகைப்படும். அறிவு-உயிர் மாயையின் விளைவாக உள்ள பொருள்களை அறியு அறிவு. மகிழ்வு-உயிர் தான் பயன் பெறாதிருந்தும் பெற்றதாக மகிழும் மகிழ்வு. வலியின்மை - அகப்புறக் கருவிகளின்றிப் பொருள்களை அறிய இயலாத வலியின்மை. விபரீதம்- ஒன்றை மற்றொன்றாகக் கருதுவது. இவ் அறிவு ஐம்பது வகைப்படும். அறிவு 8, மகிழ்வு 9, வலியின்மை 28. விபரீதம் 5. இவற்றைப் பஞ்சா சத்பாவகம் என்பர். பஞ்சாசத் பாவகம்-ஐம்பது வகைக் குணம். இவ்வாற்றான் புத்தி தத்துவம் என்பது முக்குண வடிவாயது என்றும், பொறிவழி வரும் பொருள்களைப் பகுத்துணர்ந்து உறுதிப்படுத்துவது என்றும், அவ்வாறு அறியும் வகையில் ஐம்பதுவகைக் குணங்களை உடையதென்றும் பெறப்படும்.

43. அகங்காரம், மனம், சித்தம் ஆகியவற்றின் தொழில்

ஆனதனு அதனில்உறும் அநிலனையும் இயக்கி,
ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்துஆய்,
யானலது பிறர் ஒருவர் எனை ஒப்பார் புவியில்
இல்லைஎனும் இயல்பினதாய், இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதின் முந்திஉறும் இச்சை
தான் உருவாய்ச்; சங்கற்ப சதாகதியும் தந்து,
மானதமா னதுநிற்கும்; சிந்தைநினைவு; ஐயம்
வந்துதரும் மனம்ஒழிய வகுப்பொ ணாதே.

(தெ-ரை) அகங்காரம் என்பது வினைக்கீடாக வந்து உடம்பில் பொருந்தியிருக்கும் உயிர்க்காற்று முதலிய காற்றுக்களை இயங்கச் செய்து, உயிரைவிட்டு நீங்காத நான் என்னும் செருக்கிற்கு மூல

மாய், இவ்வுலகில் என்னை ஒப்பார் எவருமிலர் எனக் கருதும் இயல்புடையதாய், உயிர் பொறிவழிநுகரும் பொருள்களில் முற்படப் பொருந்தி நிற்கும். மனமானது விருப்பந்தானே தனக்கு வடிவாய் ஒன்றை நினைதலையும் ஒயாத அலைவையும் தந்து நிற்கும். சித்தம் என்பது நினைவு அளவாய் நிற்கும். ஐயத்தை உண்டாக்கும் மனம் அன்றி அதனை வேறாக வகுத்துக் கூற இயலாது.

உயிர் செய்த வினைக்கு ஈடாகவே இறைவன் உடலை வழங்குகின்றான். ஆதலின் 'ஆனதனு' என்றார். தனு-உடம்பு. அநிலன்-உயிர்க்காற்று. உடலில் இயங்கும் காற்று ஒன்றாய் இருப்பினும் அது வெளிப்படும் இடத்தாலும் விளைவிக்கும் தொழிலாலும் வெவ்வேறு பெயர் கூறப்படும். நெஞ்சின் இடமாக இருப்பது உயிர்க் காற்றாம். இது உடலுக்குள் இருந்து இடைகலை பிங்கலை நாடிகளின் வாயிலாகத் தலையளவும் சென்று மூக்கினிடமாகப் போக்குவரவு புரியும். உயிர்க்கு வலிமையை உண்டாக்கும். அறிவை உளவாக்கும். மலக்காற்று-மலக் கழிவு இடத்தின் இருந்து தோன்றுவதாம். நீர், மலங்களைப்பிரிப்பது இதன் தொழிலாம். நிரப்புதல் காற்று-உண்ணப்படும் உணவு நீர் முதலியவற்றின் சத்தை உடலில் எங்கும் ஒருபடித்தாக நிரப்புவதாம். வியானக் காற்று-உண்ணுதற்குரிய உணவு நீர் முதலியவற்றை ஏற்றத் தாழ்வு செய்து அவற்றின் நோயை உளவாக்கியும் உடலை இளைக்கச் செய்தும் நிற்கும். உதானக் காற்று-உயிர்க்குப் பேச்சு உண்டாகுமாறு ஓசையை உருவாக்கித் தரும்; வீடுபேற்று நிலையிலும் உயிரொடு நிற்றலின் 'நீங்காத அகந்தை' என்றார்; இவ்வுலகில் என்னையன்றி யாரும் இல்லை எனச் செருக்குறுவதைக் கர்வம் என்பர். காற்றை இயக்கியும் கர்வம் கொள்ளச் செய்தும் நிற்றல் ஆணவத்தின் தொழில்களாம். சங்கற்பம்-நினைவு கொள்ளுதல். சதாகதி - ஓயாத அலைவு. சித்தமானது மனத்தினால் நினைக்கப்பட்ட பொருளில் துணிவு பிறவாமல் இது யாதோ எனச் சிந்தித்துக்கொண்டு இருக்கும். மனதின்த் தொழிலாகிய ஐய நிலையையே இதுவும் கொண்டு நிற்றலின் 'மனம் ஒழிய வகுப்பொணாதே' என்றார்.

### பொறிகளின் தொழில்

44. சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டம்இவை ஐந்திற்கும் தொகுவிடயம் ஆக

மன்னியசத் தப்பரிச ரூபரச கந்தம்
மருவியிடும் இவை அடைவே; வாக்குப் பாதம்
பின்னர் வரு பாணிமிகு பாயுவினேடு உபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவது உண்மை ஆகும்:

(தெ-ரை) முன்பு சொன்னவாறு செவி, மெய், கண், நா, மூக்கு ஆகிய இவை ஐம்பொறிகட்கும் புலனுக முறையே பொருந்திய ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்ற ஐந்தும் பொருந்தியிடும். சொல், கால், பின் வருகின்ற கை, எருவாய், கருவாய் என்று சொல்லப் படுகின்ற தொழிற் கருவிகள் ஐந்திற்கும் விளங்குகின்ற ஓசை பொருந்திய சொல்லுதல், நினைத்தற்கரிய செல்லுதல், இடுதல், கழித்தல், மகிழ்தல் என்னும் இவை ஐந்தும் பொருந்திய தொழில் களாம். இக்கருவிகள் தத்தமக்குப் பெருந்திய தொழிலைச் செய்து வருதல் உண்மையாகும்.

அறிகருவிகள் ஐந்தும் சாத்துவிக அகங்காரத்திலிருந்து தோன் றும். இது முன் 26வது பாடலிலும் சொல்லப்பட்டுள்ளது. ஆதலின் 'சொன்னமுறை' என்ருர். உயிர் அறிதற்கு இவை கருவியாய் நிற்ற லின் அறிகருவிகள் (ஞானேந்திரியங்கள்) எனப்பட்டன. சொல் முதலிய ஐந்தும் உயிர் தொழிற் படுதற்குக் கருவியாய் நிற்றலின் தொழிற்கருவிகள் (கன்மேந்திரியங்கள்) எனப்பட்டன. அறிகருவி கள் ஐந்தும் உடலிடத்துப் புறத்தே காணப்படும் கருவிகளைக் குறியா; அவற்றின் இடமாக உணரும் அறிகருவிகளையே குறிப்பனவாம். மன்னிய - பொருந்திய. ஓசை ஒளி முதலாயின உயிரைப் பொருந்தி நிற்றலின் 'மன்னிய சத்தம்' என்ருர். செவி, மெய், கண், நா, மூக்கு என்னும் அறிபொறிகள் ஐந்தின் வழியது சொல், கால், கை, மலக்கழிவு, கருக்கழிவு ஆகிய ஐந்துமாம் என்பதை விளக்கவே 'பின்னர் வரு' என்ருர். மன அளவிலும் செவிஅள்விலும் நிற்கும் ஒலியையன்றிப் பிறர் செவிக்கும் புலனுகும் ஒலியைக் குறிக்கப் 'பிறங்கு ஒலிகொள் வசனம்' என்ருர். பொறிவழிப் புலன்நுகர்வு ஏற்படினும் எவ்வக் கன்மத்தை ஈடேற்ற இப்புலன்நுகர்வு நிகழ் கின்றன என்பது அறிய இயலாமையின் 'உன்னரிய' என்ருர்.

ஐம்பெரும் பூதங்களின் தொழில்.

45. முந்தியஐம் பூதங்கள் வான்ஆதி ஆக
முயங்கியநல் செவிநாசி கண்நாமெய்ம் முறையால்
இந்தவயின் நிறைவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்உருவின் இலங்கியிடும்; புறத்து
வந்தடைய இடம்கொடுக்கும் நிரந்தரமாய் வானம்;
வாயுமிகச் சலித்து எவையும் திரட்டும்; தீவெம்மை
தந்துஅவை சுட்டுஒன் றுவிக்கும்; நீர்குளிர்ந்து பதமே
தரும்; உரத்துத் தரிக்கும் முந்து தரணிதானே.

(தெ-ரை) நுட்பமாக விளங்கும் ஐம்பூதங்கள் எனப்படும் தன் மாத்திரைகள் ஐந்தும், காணப்படும் வான் முதலிய ஐம்பெரும் பூதங்களை இடனாகக் கொண்டு உடலொடு பொருந்திய நல்ல செவி, மெய், கண், நா, மூக்கு எனும் இடங்களில் நின்று பொறிவழி வரும் பொருள் நுகர்வை உயிர் அறியும்படி செய்யும். வானம் ஏனைய பூதங்கள் தன்னிடத்து வந்து அடையப் பெருவெளியாய் இடங் கொடுத்து நிற்கும். காற்று மிகவும் அசைவுடையதாய் எல்லா வற்றையும் திரட்டும். நெருப்பு வெப்பத்தைத் தந்து அவற்றைச் சுட்டு ஒருமுகப்படுத்தும். நீர் குளிர்ந்து சுவை தந்து நிற்கும். முந்திய நிலம் கடினமாய் எவற்றையும் தாங்கி நிற்கும்.

பூதங்கள் மூவகைப்படும். அவை அகப்பூதம், அகப்புறப்பூதம், புறப்பூதம் என்பன. பொறிகளுக்குப் பற்றுக்கோடாக இருப்பன அகப் பூதங்களாம். உடல்உறுப்புக்களாய் நின்று உயிரது கருவியாக நிற்பன அகப்புறப் பூதங்களாம், புறத்தே காணப்படுவன புறப்பூதங்களாம். இவற்றுள் முதற்கண் குறிக்கப்பட்டன அகப் பூதமாம். ஆதலின் 'முந்திய ஐம்பூதங்கள்' என்றார். எனவே உயிர் ஐம்பொறிகட்கும் பற்றுக்கோடாக விளங்கும் இவ் அகப்பூதங்கள் வழி அகப்புறப் பூதங்களின் இடனாகக் கொண்டு புறப்பூதங்களின் நுகர்வைப் பெற்றிடும் என்பது கருத்தாயிற்று. வானம் செவி என்னும் அறி பொறிக்குப் பற்றுக் கோடாகச் செவிகளில் நின்று உயிர் ஒலியை அறியுமாறு செய்யும். காற்று மெய் என்னும் அறிபொறிக்குப் பற்றுக்கோடாக உடலில் நின்று உயிர் ஊற்றை அறியுமாறு செய்யும். நெருப்பு கண் என்னும் அறிபொறிக்குப் பற்றுக்கோடாகக் கண் களில் நின்று உயிர் ஒளியைக்காணுமாறு செய்யும். நீர் நா என்னும் அறிபொறிக்குப் பற்றுக்கோடாக நாவில் நின்று உயிர் சுவையை

அறியுமாறு செய்யும். நிலம் மூக்கு என்னும் அறிபொறிக்குப் பற்றுக்கோடாக மூக்கில் நின்று உயிர் நாற்றத்தை அறியுமாறு செய்யும். செவி, மெய் முதலாயின உடலொடு பொருந்தியிருத்தலின் 'முயங்கிய நல் செவி' என்றார் முயங்கிய - உடலொடு பொருந்திய. ஞான நூற் பொருளை ஏற்றற்கு இடமாய் நிற்றலின் 'நற்செவி' என்றார். இந்தவயின் — (செவி, மூக்கு முதலாய) இடங்களில். தம் உருவில்—தத்தம் உருவில். அஃதாவது அசப்பூதங்களாக நின்றுதவும் தத்தம் உருவில். ஒளியாகிய தன்மாத்திரையினின்றும் பருப் பொருளாய்ப் புறத்தே தோன்றுவது வானமாகும். இது பல்வேறு வகையான ஒலிகளை உடையது. உயிர்கள் பலவும் போக்குவரவு புரிதற்கு இடம் கொடுத்து நிற்பது இடையீடு அற்ற வெளியாய் (நிரந்தரம்) நிற்பது. வெளியாகிய குணத்தையும் இடங் கொடுத்தலாகிய தொழிலையும் உடையது. ஊறு என்னும் தன் மாத்திரையினின்றும் தோன்றுவது காற்று ஆகும். இது ஒலி ஊறு என்னும் இரண்டு குணமுடையது. உடம்பினுள் மூச்சுக்காற்று முதலாகப் பத்து வகைப்பட்டு இயங்கவல்லது. எழுதல் இருத்தல் முதலிய தொழில்களுக்கு ஏதுவாயது அசைதலாகிய குணத்தையும் பரந்து கிடப்பதைத் திரட்டுதலாகிய தொழிலையும் உடையது. ஒளி என்னும் தன் மாத்திரையினின்றும் தோன்றுவது தீ ஆகும். இது ஒலி ஊறு ஒளி ஆகிய மூன்று குணங்களை உடையது. சுடுதலாகிய குணத்தையும் எவற்றையும் ஒன்றுவிக்கும் தொழிலையும் உடையது. சுவை என்னும் தன்மாத்திரையினின்றும் தோன்றுவது நீர் ஆகும்: ஒலி ஊறு ஒளி சுவை ஆகிய நான்கு குணங்களை உடையது. குளிர்த லாகிய குணத்தையும் பதம் செய்தலாகிய தொழிலையும் உடையது: நாற்றம் என்னும் தன்மாத்திரையினின்றும் தோன்றுவது நிலம் ஆகும் ஒலி ஊறு ஒளி சுவை நாற்றம் ஆகிய ஐந்து குணங்களையும் உடையது. கடினமாதலாகிய குணத்தையும் எவற்றையும் தாங்குதலாகிய தொழிலையும் உடையது. உரத்து - வலிமையாய் நின்று. தரிக்கும் - தாங்கும். தான் வன்மையாய் நிற்றலின் எவற்றையும் தாங்கும் இயல்பு இதற்கு உரியதாயிற்று. முற்பட நம்முடன் இருந்து யாண்டும் தாங்குதலின் 'முந்துதரணி' என்றார். ஐம்பெரும் பூதங்களை எண்ணுவோர் நிலத்தை முதலாக வைத்து எண்ணுவர். இவ் வகையில் 'முந்துதரணி' என்றார் என்றலும் ஒன்று. 'நிலம் நீர் தீ வளி விசும் போடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம் ஆதலின்' எனத் தொல்காப் பியமும், 'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி' என அப்பரடிகளும் இதனை முதலாக வைத்துக் கூறுமாறு காண்க,

46. தத்துவங்களின் தொகையும் உயிர் அவற்ருெடு கூடி வினைப் பயனைநுகரும் முறையும்

இந்நிலையில் ஐந்துசுத்தம்; ஏழ்சுத்தா சுத்தம்;
எண்மூன்றும் அசுத்தம்எனும் இவை முப்பத் தாரும்;
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடும் துயர்தாம்
மருவும்,உரு நிலைஅழிய வரும்பொழுது வரிஆர்
பன்னகம்அண் டசம்கனவு படர்வகையே முன்னம்
பகரவரும் கலாதிநிலை பரவியசூக் குமம்ஆம்
தன்உருவில் அணைந்துபயன் அருந்திஅரன் அருளால்
தரையினிடை வரும்என்று சாற்றும் நூலே

(தெ-ரை) இவ்வாறு கூறிவந்த நிலையில் சுத்தவித்தை முதலிய ஐந்தும் சுத்த தத்துவம் என்றும், கலை முதலிய ஏழும் சுத்தா சுத்த தத்துவம் என்றும், நிலம் முதலிய இருபத்துநான்கும் அசுத்த தத்துவம் என்றும் கூறப்பட்டு இவற்றின் தொகை முப்பத்தாறும். இவ்வாறு பொருந்திய தத்துவங்களின் வழியே உயிர் மயங்கிப் பெரும் துன்பத்தைப் பொருந்தும். உடல் நிலைகுலைய வருங்காலத்தில் கோடுகள் பொருந்திய பாம்பு முன்னைய தோலை விடுத்துப் போதல் போலவும், முட்டையில் தோன்றிய உயிரினங்கள் அம் முட்டையை விட்டுப் போதல் போலவும், நனவில் கண்டவற்றைக் கனவில் மறந்து அறிவு வேறுபட்டாற் போலவும், முற்கூறப்பட்ட கலை முதலிய தத்துவங்களோடு கூடிய நுண்மையான தனக்குரிய புரியட்டக உடலொடு சென்று, வினைப் பயன்களை நுகர்தற்குரிய உடம்புகளைப் பொருந்தி, மேலுலகு கீழுலகுகளில் நுகரத்தக்க இன்ப துன்பங்களை நுகர்ந்து. இறையருளால் இந் நிலவுலகில் மீளவும் வந்து பிறக்கும் என்று ஆகமங்கள் சொல்லும்.

உயிர் உய்தி பெறுதற்கு வேண்டும் கருவிகளே தத்துவம் எனப் படும். இறைவன் தன் அருளால் அவற்றைத் தோற்றுவிக்கும் முதலிடமாக விளங்குவது தூமாயை (சுத்த மாயை) ஆகும். இதிலி ருந்து சிவம் சக்தி சாதாக்கியம் ஈசுவரம் சுத்தவித்தை என்னும் ஐந்தும்தோன்றும். இறைவன் எடுத்துக் கொள்ளும் திருமேனிகளுக்கு இடமாய் இருத்தலாலும், உயிர்கட்கு ஞானப் பொருளை நவிலும் வேதாகமங்கள் தோன்றுதற்கு இடமாய் இருதலாலும், மலகன்ம கலப்பின்மையாலும், விருப்பு வெறுப்பும் அவற்றுலுய துன்பமும் இல்லாமையானும் இதனைத் தூமாயை என்றனர். உயிர்கட்கு உற்ற நுகர்வுகளைச் செலுத்துதற்கு இடமாய் நிற்றலின் இதனைப் பிரேரக காண்டம் என்பர்.

உரைநடை

# 52. தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்

## பாண்டியன் நந்தவனம் வைத்தல்

அரசர்க்கரசனாகிய வங்கிய சூடாமணி பாண்டியன் சோமசுந்தரக் கடவுளின் திருமுடிக்குச் சூட்டப் பலவகை மலர்களைத் தரும் திருநந்தவனம் வைத்தலாகிய திருப்பணியை மேற்கொண்டான். குருக்கத்தி, பாதிரி, ஆத்தி, வில்வம், மந்தாரம், மல்லிகை, முல்லை, மகிழ், கோங்கு, கொன்றை, கரந்தை, புலரி, நந்தியாவட்டம், செருந்தி, குருந்தம், புன்னாகம், தாமரை, நீலம் முதலான பல மலர்கள் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலத்தும் எட்டுத் திக்குகளிலும் மணங்கமழ, வண்டுகள் தேனுண்டு இசைபாடத் திருநந்தவனத்தினை உண்டாக்கினான். மேலும் சண்பக நந்தவனம் ஒன்றையும் தனியே வைத்தான்.

## சண்பகசுந்தரர் – சண்பகமாறன்

வங்கிய சூடாமணி பாண்டியன், தான் வைத்த சண்பக நந்தவனம், நுண்ணிய இடையினையுடைய மங்கல மகளிர் பொன்னணி பூண்டதைப்போல அழகுபெற்று, மொய்த்து விளங்கும் சண்பக அரும்புகள் உடைந்து, பிற நந்தவனத்தின் மணத்தையெல்லாம் தன்னுட்படுத்தி நறுமணத்துடன் பசந்து மலர்ந்தனவற்றைக் கண்டு மகிழ்ந்தான்; வண்டுகள் மோவாத சண்பக மலர்களை[1]க் கொய்து நல்ல மலர்களாகத் தேர்ந்தெடுத்துக் காம்பு முதலியன ஆய்ந்து [2]இண்டை, தொடை, தொங்கல், தாமம், கண்ணி ஆகிய பலவித மாலைகளைத்

---

1. சண்பக மலரில் வண்டுகள் மோவாததனால், அது ''வண்டுணா மலர்'' எனப் பெயர் பெறும்.

2. இண்டை – தண்ட வடிவமாகத் தொடுத்த மாலை தொடை- சதுரமாகத் தொடுத்த மாலை. தொங்கல்-சரமாகத் தொடுத்த மாலை. தாமம்-கோத்த மாலை கண்ணி-வட்டவடிவமாகத் தொடுத்த மாலை; இது முடி மாலை ஆகும்.

தொடுத்துச் சோமசுந்தரக் கடவுளின் திருமேனியில் அணிவித்து அழகு செய்தான்; பொன்போல் விளங்கும் சண்பக மாலையணிந்த சோமசுந்தரக் கடவுளின் புதிய திருக்கோலத்தைத் தரிசித்து வியந்து ''இவர் சண்பக சுந்தரர்'' என்று கூறித் திருமுன்பு வணங்கினன். அன்று முதல் ஆலவாய்ச் சுந்தரருக்குச் 'சணபக சுந்தரர்' என்ற திருநாமம் வழங்குகின்றது. சண்பக மாலைகளை இறைவர் திருமுடிக்குச் சாற்று வித்த காரணத்தினலே வங்கிய சூடாமணி என்னும் பாண்டியனும் சணபக பாண்டியன் எனப் பெயர்பெற்று விளங்கினன்.

### இளவேனிற் காலம் வருதல்

சண்பக பாண்டியன் சண்பக சுந்தரரிடத்து அன்பு நீங்காமல் நல்ல திருப்பணி செய்துவரும் நல்ல நாளிலே, இளவேனிற் காலம் வந்தது; அவ் விளவேனிற் காலம் மக்களின் வெப்பத்தைப் போக்கும் இளந் தென்றலும், தன் வெப்பந் தீர்க்க வேறு இளந்தென்றலை விரும்பியது; சோலையும் வேறு சோலையை விரும்பியது; தூய நீர்த் தடாகமும் வேறு நீரோடையை விரும்பியது; சந்திரனும் வேறு சந்திரனை விரும்பியது. என்னென்பது அவ் வேனிற்கால வெப்பத்தை!

### வேனிற் கால வருணனை

அப்போது மாமரங்களெல்லாம் வானின்கண் உள்ள கற்பகத் தருக்களின்மேல் சிறிச் சிவந்து எழுந்தாற்போலச் செந்தளிர்களைப் பரப்பி வானுலகை அளாவ நின்றன. நில மணிகளை இடையிடையே பதித்துச் செய்த காதணியை அணிந்த மகளிர்போலச் செருந்திகளனைத்தும் வண்டுகள் இடையிடையே தங்கப் பூத்து மலர்ந்தன: முள் முருக்கு மலர்கள் சூரியனைப்போலச் செந்நிறமாகவும், காஞ்சி மரங்களெல்லாம் இந்திரனைப் போலக் கருநிறமாகவும், வெண்கடம்பு மரங்களெல்லாம் சந்திரனைப்போல வெண்ணிறமாகவும், காயாஞ் செடிகளெல்லாம் திருமாலைப்போல நீலநிறமாகவும் மலர்ந்தன. வையையாற்றின் கரையாகியபெண் மணல் மேடாகிய இடையில் மேகலையை அணிந்தாற்போலக் குங்கும மரங்கள் மலர்ந்து மகரந் தத்தைச் சிந்தின. இளம் புன்னை மரங்களெல்லாம் மரகதம் போல இலைகள் தழைத்து முத்துக்கள் போல முகைகள் அரும்பி, பொன் போலப் பூக்கள் மலர்ந்து கடலிலுள்ள பவளக்காடு போல மகரந் தத்தைச் சிந்தின.

மரங்களெல்லாம் ஊடிய மகளிர்போல வெம்பி இலைகளை உதிர்த்துக் காதலரைக் கூடிய மகளிர்போல எங்கும் தழைகள் தோன்றத் தழைத்துத் தலைவரைப் பிரிந்து வாடுகின்ற மகளிர்

போலக் கண்ணீர் (கள் + நீர்) ஒழுக உடல் பசந்து, காம மயக்கம் மிக்க மகளிரின் பழிச்சொல்போலப் பூக்கள் பூத்துச் செறிந்தன. [1] தம்மால் விரும்பப்பெற்ற காதலர் மெலியத் தாமும் மெலிந்து அவர் உள்ளங் களிகூரத் தாமும் களிகூர்ந்து நிற்கும் கற்புடை மகளிர் போலக் கோடை வெப்பத்தால் மரங்கள் வாடும்போது அவற்றைச் சுற்றி நிற்கும் பசிய கொடிகளும் வாடி, மரங்கள் தழைக்கும்போது அக் கொடிகளும் தழைத்து நின்றன

நெடிய தென்றிசையினின்று வரும் தென்றற்காற்றுத் தள்ளுதலால் தேன் துளிக்க, வண்டுகள் இசைபாடச் சாய்ந்து ஆடும் பூங்கொம்புகள், நாட்டியப் புலவன் ஆட்டுவிக்க நகை முகத்திலே வியர்வை சிந்தப் பாட்டிசைத்து ஆடா நின்ற நாடக மகளிரை ஒத்தன.

செவ்வந்தி மலரும், மகிழம் பூவும் நிலத்திலே உதிர்ந்து வாடி உலர்ந்தும் வண்டுகள் மொய்த்துத் தேன் உண்ணக் கிடப்பனவாகிய காட்சி, உயர்குடிப் பிறந்த நல்லோர்கள் தம் செல்வம் சுருங்கிய விடத்தும், தம்மிடத்து வந்து இல்லை என்று கூறி வருந்தியவர்க்குத் தம்முயிரை மாறியாகிலும் கொடுப்பர் என்பதை நினைவூட்டும்.

மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமும் உதிர்ந்து வாடி
உலர்ந்துமொய்த்(து) அளிதேன் நக்கக் கிடப்பன உள்ளமிக்க
குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினுந் தம்பால் இல்லென்(று)
அலர்ந்தவர்க்(கு) உயிரை மாறி யாயினுங் கொடுப்பர் அன்றே.

மெல்லிய ஆண் குயில்களெல்லாம் அழகிய தேமாவின் பூந் தளிர்களைக் கோதிக் காமம் அரும்பிய பெட்டைகளைக் கூவி உருக்குவன, செங்கோலையுடைய பெருவேந்தன் தோன்றிய நாடு காவல் மாறிய குறுநில மன்னனைப்போல மயில்களெல்லாம் ஒடுங்கின

---

1. கற்புடைய மகளிரும் காதலரும் ஈருடற்கோருயிர்போல அன்பால் இயைந்து நிற்பர்: அதனால் அவருள் ஒருவர் எய்தும் இன்ப துன்பங்கள் மற்றவர்க்கும் எய்தும். இங்கே, 'காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந் தாங்கிருவர், ஆகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம், ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பல வன்மலையில், தோகைக்குந் தோன்றற்கும் ஒன்றுப் வருமின்ப துன்பங்களே' என வரும் திருக்கோவையார் பாடல்சிந்திக்கற்பாலது.

தென்றல் வருகை

தென்றற்காற்று, பலவிடங்களிலுஞ் சென்று நூல்களை ஆராய்ந்து அறியும் அறிவுடைய மாணவன் போலப் பூஞ்சோலையில் நுழைந்து பொய்கையிலே தாவித் தாமரை பலரைத் துழாவி, நறுமணமுள்ள இருவாட்சி, முல்லை, மல்லிகைப் பந்தரிலே படிந்து மலர்களின் மணங்களைக் கவர்ந்து குளிர்ந்து மெதுவாய் வந்து உலாவும்.

பொங்கரின் நுழைந்து வாவி புகுந்துபங் கயந்து ழாவிப்
பைங்கொடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட்டுண்டு குளிர்ந்துமெல்லென்று தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல் இயங்கும் அன்றே.

வேனிலாகிய அரசன் அரசு வீற்றிருத்தல்

தாமரை களாஞ்சி (தாம்பூலமெடுக்குங் கலம்) ஏந்தவும், குயில் முழவம் ஒலிக்கவும், மருத மரத்தில் அமர்ந்த கிளிகள் மங்கல வாழ்த்துக் கூறவும், வண்டுகள் இசை பாட்டுப் பாடவும், தாழைகள் வாள் ஏந்தவும் வேனிலாகிய அரசன் முடி சூடி அரசு வீற்றிருக்கப் பெறுவது அக் குளிர்ந்த பூஞ்சோலை ஆகும்.

ஆடவர் வேனில் வெம்மையை ஆற்றும் இடம்

ஆடவர்கள் சந்திரகாந்தக் கல்லாலாகிய மண்டபத்திலும், செய்குன்றிலும், சித்திரமண்டபத்திலும், சோலையினிடத்தும், தாமரைத் தடாகத்தினிடத்தும் அன்றி வேனில் வெம்மையைப் போக்கும் இடம் வேறு காணாராயினர். நான்மாடக்கூடலிலுள்ள காளையர்கள் தத்தம் அழகிய மாதர்களுடன் கற்பச் சோலை போன்ற தோற்றமுடைய பூஞ்சோலையில் இன்பந் துய்க்கப் போவராயினர்.

ஆடவரும் மகளிரும் பூம்பொழிலை அடைதல்

ஆடவர்களிற் சிலர் யானையின் மீது சிங்கத்தைப் போலச் சென்றனர் சிலர் குதிரையின் மேல் யானையைப் போலச் சென்றனர். சிலர் தேர் மீது அமர்ந்து சூரியனைப் போலச் சென்றனர் சிலர் மலை போல நடந்து சென்றனர். மடந்தையர் சிலர் நிலப் பிடியின் மேல் பிடிபோலச் சென்றனர் வைரமுத்துச் சிவிகையின்மேல் கலைமகள் போலச் சென்றனர். குதிரையின்மேல் இரதி தேவியைப் போலச்

சென்றனர். சிலர் தங்கள் காதலர்களின் கையைப் பிடித்துக் கொண்டு சென்றனர். இவ்விருதிறத்தாரும் விருப்பத்தோடு வையைநதி முத்துக்களை வெள்ளிய மலைபோலக் குவிக்கின்ற மணற்குன்றுகளின் புறஞ் சூழ்ந்த சோலைகளை அடைந்தனர்.

பெண் யானைகளிலும் குதிரைகளிலும் ஏறிச்சென்ற மகளிர், தத்தம் கணவர்கள் பெரிய தோள்களை ஏந்த விசயலக்குமி போலத் தழுவி இறங்கினர்; சோலையினிடத்துப் பூங்கொடிகள், மகரந்தப் பொடிகளைச் சிந்துதல்போலத் தங்கள் உடலில் அணிந்த கலவைச் சந்தனம் உலர்ந்து சிந்த வனமங்கையர்போலச் சென்றனர். அம் மகளிர், நடக்கும் பதுமைபோலப் பூக்கள் நிறைந்த மாதவி (குருக் கத்தி)ப் பந்தர் சுழலிலும், புன்னைமர நிழலிலும், தேமாவின் நிழலி லும், செருந்தியின் நிழலிலும், தாழையின் நிழலிலும் போய்ச் சேர்ந்தனர்.

மகளிரது கூந்தலைக் கருமுகில் என்று கருதி ஆடுகின்ற மயில்கள், அவர் கண்களைக் கண்டு அம்பு என்று பயந்து ஓடும். அம் மகளிரின் உருவத்தை மாந்தளிர் என்று எண்ணிக்கோதி உண்ணச் செல்லும். குயில்கள், அவர் பாடும் பண்ணொலியினைக் கேட்டு ஒதுங்கி நாணும்.

நீரோடைகளே அல்லாமல் குவளை, ஆம்பல், தாமரைகளைப் பூங்கொம்புகளும் பூத்தனபோலக் கொடிபோன்ற இடையினையுடைய மகளிரின் கண், வாய், முகங்களின் தொகுதியால் சோலைகள் விளங்கின.

ஆடவர்கள் தத்தம் மகளிருடன் சென்று இல்லம்போன்று கொடிகள் மிடைந்த இடத்தின்கண் இயக்கர்கள் போலச் சார்ந்து அங்குப் பனி நீரைத் தெளித்து வெம்மையை ஆற்றிக்கொண்டனர். பின்னர் எல்லோரும் நடந்துவந்து தளர்ச்சியினைப் போக்கிக்கொண்டு மலர் கொய்யப் புகுந்தனர்.

### மலர் கொய்து விளையாடல்

மைதீட்டிய பெரிய கண்களையுடைய மகளிர்கொம்புகளை வளைத்து அவற்றின் மலர்களைக் கொய்து மூக்கில் மோந்து பார்த்துக் குழை களிலும் காதுகளிலும் கூந்தலிலும் அணிந்து தம் தம் கணவர்களுக்கு மகிழ்ச்சியினை விளைவிப்பர். பின்பு காமன் கணைபோல அவற்றை எடுத்துக் கணவர் மார்பில் எறிவர். மகளிர் பூங்கொம்புகளை வளைத்த

போது அரும்புகள் நெகிழ்ந்து மலர்ந்த அப்பூங் கொம்புகளிலுள்ள ஆண் வண்டுகளும் பெண் வண்டுகளும் ஒலித்துக்கொண்டு அவர்கள் கூந்தலில் புகுந்து இசை பாடித் தேனைப் பருகுதல், விறலியோடு சேர்ந்து ஏழிசை பாடிக் கள்ளினை அருந்தும் பாணர்கள் போன்று இருந்தது.

'இவ்வுலகிலே விடுபேறு அளிக்கும் தெய்வம், மகளிரே' என்று உரைப்பார்[1] 'மொழி பொய்யன்று: மெய்யே ஆகும்;அம் மகளிர் வளைக்க வளைந்து நடுங்கி அவரடிகளில் மலர்களைச் சிந்தி மலர் முகத்தினின்றும் கண்ணீர் (கள் + நீர்) ஒழுகக் கொம்புகளும் வழிபட்டனவெனில் உலகின் தன்மையை என்னென்று கூறுவது.

ஒரு பெண் உயர்ந்த கொம்பொன்றை எட்டி வளைக்கும் தோறும் கைக்குஎட்டாமையால் வாடிமலர்க்கொடிபோலச் சோர்ந்துநின்றுள்; அதனை மன்மதன் போன்ற ஒருவன் கண்டு எதிர்சென்று, ''ஏன் வாடுகின்றுய்? எனது தோளின் மீது ஏறி மலர்களைக் கொய்வாயாக'' என்று அவளைத் தாங்கி நின்றுன். மற்றொரு பெண் அவ்வாறே எட்டா மலர்க்கொம்பை வளைக்க வருந்திநின்றபோது அதனை அவள் உயிர்க் காதலன் கண்டு விரைந்து வந்து, ''இதுவும் ஊடிய மகளிரோ? கொய்து கொள்'' என்று அக்கொம்பை வளைத்து நின்றுன். அப் பெண் (ஊடிய மகளிர் எனப் பன்மையாற் கூறியதனுலே) கண்களி லிருந்து முத்துப்போலக் கண்ணீர் துளிக்க நின்றுள்.

ஒருவன் தான் பறித்த செருந்தி மலரைத் தன் காதலியின் காதி லுள்ள குழையில் செருகி அதனை நோக்கி,''இக்குழைஅழகாயுள்ளது'' என்றுன். அவளோ ''இதனை என் தங்கைக்கு இடுவாய்'' என்று வெகுண்டு கூறி அக்குழையோடு மலரையும் விசி எறிந்து அந்த அன் பனுக்குத் துன்பம் விளைவித்தாள்[2].

ஒரு பெண், மாமரத்திலுள்ள தனது கூட்டின்கட் செல்லும் இளம் பெண் குயில் தன் உயிர்போன்ற ஆண் குயிலைக் கூவி அழைத்

---

1. இங்ஙனம் உரைப்பவர் உலகாயதர் ஆவர்; ''இம்மையின் முத்திக் கதியருள் கிற்பது காமரு லோகாயதம்'' என்பதாம்.

2. இங்கு,''கோட்டுப்பூச் சூடினுங் காயும் ஒருத்தியைக்,காட்டிய சூடினீர் என்று'' எனவரும் திருக்குறள் நோக்கற்பாலது.

தலேக்கண்டு தன் காதலனேக் கண்ணுல் நோக்கி மரக்காவின் மருங்குள்ள ஒரு குருக்கத்திப் பந்தரை அடைந்தனள்.

ஒருவன், தன் காதலிக்குப் புதிய மலரைக்கொய்து கொடுத்தான். அப்போது அவன் உடலில் மலரின் மகரந்தப்பொடிகள் சந்தனத்தோடு கலந்த கத்தூரி போலச் சிந்திக் கிடந்தன. அதனே கண்ட காதலி, ''இஃது எந்த மாதரைக் கூடினமையால் அமைந்த சாந்து'' என்று வினவினுள். அவன், ''என்னுள்ளத்திலே உன்னேயும் தாங்கிக்கொய்த சண்பக மலரின் மகரந்தம்'' என்ருன். அவளோ ('உன்னேயும்' என்றதனுல் மற்ருெருத்தியையுந் தாங்கியதாகக் கருதி)நெய்சொரிந்த நெருப்பைப்போலச் சினந்து நின்ருள்.

ஒருவன் தன் காதலியின் ஊடலேத் தணிக்க அவள் காலில் வந்து வீழ்ந்து வணங்கினுன். அப்போது அவன் முடிமணியிலே தன் நிழலேக் கண்ட அவள், ''நீர் சிவபெருமானேப் போல முடியிலே ஒருத்தியை ஒளித்து வைத்துக்கொண்டு என்னேப் பணிவது ஏன்?'' என்று கூறிச் சிரித்துக் காதலனுக்குத் துன்பத்தின் மேல் துன்பம் விளேத்தனள்.

ஆடவர் பொருள்களே விலே மாதர் கவர்ந்தது போல மலர்களே யெல்லாம் மகளிர் கொய்ததனுல் புதிய மலர்கள் ஒழிந்த சோலேயின் காட்சி, கைப்பொருள் அற்ற வறியவன் போலத் தோன்றிற்று.

பொய்கையில் நீராடல்

மகளிர் தம் காதலருடன் பூக் கொய்யும் இன்பத்தைத் துய்த்துக் கண்களேயும் உடலேயும் கொழுநர் வேறுபடுத்துவது போல வேறு படுத்தும் பொய்கையின்கண் நீராடச் சென்றனர்.

அன்னம்போன்ற மகளிர் நீராடும் பொய்கையானது நீலோற்பலமும், அல்லியும், தாமரையுமே அன்றி அழகிய முல்லேயையும், சண்பகத்தையும், கோங்கினேயும் பூத்திருத்தலே ஒத்தது. மகளிர் நீரில் மூழ்குந்தோறும் அலேகள் வரிசை வரிசையாக மோதுதல், கண்களும் நீலோற்பல மலர்களும். முகங்களும் தாமரை மலர்களும், வாய்களும் ஆம்பல் மலர்களும் தம்மில் போர்புரிதலே ஒத்தன; பகைவர் மேலெழுந்து போருக்கு வருவரேல் வலியற்றவர் எதிர்த்து நிற்காதவாறுபோல, மகளிர் நீராடப் பொய்கையை அடையுமுன்னே அங்குள்ள கயல் மீனும், வரால்மீனும், பாம்பும், ஆமையும், நண்டும், அன்னமும் அஞ்சி ஓடின.

தூய நீரிலே மூழ்கிக் கரையேறும் தன் காதலியைக்கண்ட ஒரு காதலன், அவள் வாயும் கண்களும் முறையே விளர்த்தும் சிவந்தும் இருக்கும் தன்மையைக் கண்டு அடையாளம் தெரியாமல், ''என் இனிய உயிரனையாள் எங்கே உள்ளாள்'' என்று வினவினன். அதனைக் கேட்ட அவள், சிவந்த கண்ணுடன் கண்ணீர் விட்டு நின்றாள்.

ஒரு பெண் நீராடும் பொருட்டுத் தன் கணவன் கையைப் பிடித்துக்கொண்டு செல்கின்றவள், அங்கு நீராடிக் கரையேறும் ஒரு பெண்ணை அவன் நோக்கியதும், ''சீச்சி என் தங்கையின் எச்சிலாகிய நீரில் யான் ஆடேன்'' என்று கூறிக்கரையிலே நின்றனள்.

தன் கணவனுடன் ஊடிக் காதல் நோய் கொண்ட ஒரு பெண் அக்காதலன் காண ஆழமாகிய நீரின்கண் அழுந்துவாள் போலப் பாவனை காட்டிச் சோர்ந்து அருகிலே தாமரை மலரில் தங்கிய அன்னத்தை நோக்கி, ''கைகொடு'' எனக் குறையிரந்தாள்.

ஆடவரும் மகளிரும் நறுமணங்கமழுஞ் சுண்ணப் பொடியையும் கலவையையும் கத்தூரியையும் எடுத்துத் தம்முள் மாறி மாறி வீசி விளையாடினர்; அதுபோது இடைவெளியுள் நின்று அந்நறுமணப் பொருள்களை வண்டுகள் பாய்ந்துண்ணுதல், பொருளை இடைவழியிலே பறித்துக்கொள்ளும் ஆறலைப்பாரைப் போன்றது.|| கொய்த நீல மலரையும், தாமரை மலரையும் எடுத்து மன்மதன் எய்யும் மலர்க்கணைபோல ஒருவர் மேல் ஒருவர் வீசி எறிவர்; அங்ஙனம் வீசிய மலரைக் கையினால் அவர்கள் தேக்கி அதனை எறிந்தவர் முகத்தில் படுமாறு செய்து நகைத்து மகிழ்வர். பெண் யானையும் ஆண் யானையும் நீரை வீசி விளையாடுதல்போலப் பனி நீருடன் சுண்ணப்பொடியையும் அள்ளி மகளிரும் ஆடவரும் வீசி விளையாடுவர். பிறகு கைகளாலே முன் வீசிய சாந்து அழிந்திடத் தூய நீரை அள்ளி வீசுவர்.

பொய்கையில் குடைந்து நீராடும் மகளிர் கூட்டத்துள் ஒரு மாது ஒரு ஆடவன் முகத்தில் தன் வாயிலுள்ள தூயநீரைக் கொப்பளித்து உமிழ்ந்தாள்; அவன் அந்நீரை, 'ஆம்பல் மலரிலுள்ள தேன்' என்று கருதிக் குடித்தான். ஒரு ஆடவன் நீரோடும் தன் காதலியை நோக்கி, ''அங்கே ஆழம் செல்லாதே; நில்'' என்று தடுப்பவன் போலச் சென்று தன் கைகளால் வாரித் தூக்கி மார்பின்கண் அணைத்து இரதியின் தோளைத்தழுவிய மன்மதனைப்போலச் சென்றான்.

## "ஸ்ரீ குமரகுருபரர்"

### சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| .. | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| .. | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

---

### ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | .. | விலை ரூ. | 1—50 |
| உண்மை நெறி விளக்கம் | .. | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | .. | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | .. | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | .. | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் திருவெண்பாவும் | .. | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | .. | விலை ரூ. | 1—25 |
| இருபா இருபஃது | .. | விலை ரூ. | 1—25 |
| போற்றிப் பஃறொடை | .. | விலை ரூ. | 1—20 |
| நெஞ்சுவிடு தூது | .. | விலை ரூ. | 1—50 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை ரூ. | 15—00 |
| திருவருட்பயன் - நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன் | | விலை ரூ. | 5—00 |
| அபிராமி அந்தாதி தெளிவுரையுடன் | | விலை ரூ. | 1—00 |
| திருவிளையாடற்புராணம் உரைநடை (மதுரைக் காண்டம்) | | விலை ரூ. | 4—00 |
| திருவிளையாடற்புராணம் உரைநடை (கூடற் காண்டம்) | | விலை ரூ. | 3—50 |
| திருமுறைகண்ட புராணம் சேக்கிழார் புராணம் | | விலை ரூ. | 0—75 |
| திருத்தொண்டர் புராணம் (மூலம்) | | விலை ரூ. | 12—00 |

விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு.

ரூ. 1000/க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச்செலவு இலவசம்

முகவரி :- மேலாளர்:

ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் 612504

(தஞ்சை மாவட்டம்)

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612 504